முழுமையாக வாழ்ந்தவர் திரு. வி. க. பாரதி பார்க்காத இந்திய விடுதலையையும் அதன் பின் விளைவுகளையும் பார்த்தவர். இந்தக் கால நிலையின் தாக்கத்தையும் திரு. வி. க. வின் எண்ணங்களிலும் எழுத்துகளிலும் நன்றாகக் காண முடிகிறது.

இவ்வகையில் முதலாவதாகவும் முதன்மையாகவும் குறிப்பிடத்தக்கது மார்ட்டின்லூதர் கண்ட சமயச் சீர்திருத்த உணர்வும் தியாகமும் அவர்வழி சிகன்பால்க் செய்த தொண்டும் சென்னை இராயப்பேட்டை வெஸ்லி மிஷன் Wesley Family பற்றி Encyclopaedia Britannica கட்டுரை படிக்கத் தக்கது. பள்ளி கல்லூரியில் படித்ததாலும் படிப்பித்ததாலும் திரு. வி. க. வுக்குச் சமயச் சீர்திருத்த உணர்வு மேலும் வலிவும் பொலிவும் பெற்றிருத்தல் கூடும். அவர்தம் வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து சில சான்றுகள் :

## கிறிஸ்துவக் கூட்டுறவு

> யான் சாதி கருதுங் குடியிலே பிறந்தேன் ; அவ்வெண்ணத்துடனே வளர்ந்தேன். சாதி எண்ணம் என் வாழ்க்கையில் நீண்டகாலம் தொடர்ந்து நிற்கவில்லை. அஃது இளமையிலேயே பட்டுப்போயிற்று. காரணம் யான் இளமையிலே கிறிஸ்தவருடன் நெருங்கிப் பழகினமையாகும். கிறிஸ்துவக் கூட்டுறவு என்னைப் பற்றிய சாதிப் பேயை ஓட்டிற்று.

> சாதிச் சைவர் புன்மைச் செயல்களும் என்னைச் சீர்திருத்த முறையில் விரையச் செய்தன.

> கைம்மை மணவாயிலாகவும் சாதிமத வேற்றுமைகளைக் களைந்து சன்மார்க்கத்தை வளர்க்கலாம்.

திரு. வி. க. தமது வாழ்க்கை குறிப்புகளுள் தமிழ்ப் பேராசிரியர் டாகடர் மு. வ. அவர்களையும் 'சீர்திருத்தம்' என்ற தலைப்பில் சிறப்பாகக் குறிப்பிட்டிருத்தல் ஈண்டு நினைவுகூரத்தக்கது. இறுதிவரை சைவராகவே விளங்கிய திரு. வி. க. 'கிறித்துவின் அருள்வேட்டல்' என்ற அரும்பெரும் புகழ் நூலை வெளியிட்டிருத்தலும் ஆழ நினையத்தக்கது. இத்தகைய அருள் நூல் தோற்றத்துக்குரிய வேர்க்காரணங்களைத் திரு.வி.க. வின் 'வாழ்க்கைக் குறிப்புக்கள்' என்னும் நூலில் 'கிறிஸ்துவம்' என்ற உட்தலைப்பில் உள்ள பகுதி நன்கு விளக்கும்.

இனி திரு. வி. க வின் பால் டார்வின் தாக்கம் பற்றி அவர் தம் வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்து அவர்தம் சொற்கள் கொண்டே சில குறிப்புகளைக் காண்போம்.

> கோமளீசரன் பேட்டைப் புதுப்பேட்டையிலே ஒரு பௌத்த சங்கம் கூடிற்று. அதிலே இலட்சுமி நாசு நாயுடு சிங்காரவேல் செட்டியார் முதலியோர் பேசுகின்றனர் என்று

கேள்வியுற்றேன்; யான் கூட்டத்துடன் அங்குச் சென்றேன். அங்குக் குழுமியிருந்த சிலர் என்னை உற்று உற்று நோக்கினர். எனக்கு அச்சமுண்டாயிற்று. யான் பேசாமல் அமர்ந்தேன். சிங்காரவேல் செட்டியார் டார்வின் கொள்கையைத் தமிழில் விளக்கினார். என் உள்ளம் அதில் ஈடுபட்டது. கலகஞ் செய்யப்போந்த யான் டார்வின் கொள்கை எனது பின்னைய சமய ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாயிற்று.

உடல் ஒருவித விளக்கு. இதை 'மாயாதனு விளக்கு' என்றனர் ஆன்றோர். உயிர் அறியாமை இருளில் மூழ்கிக் கிடப்பது. படிப்படியே அதன் இருளைப் போக்கி அறிவை விளக்கஞ் செய்வது உடல். அதனால் உடல் 'விளக்கு' என்று சொல்லப்பட்டது. உயிர், பலதிறி உடல்களில் ஒன்ற ஒன்ற, அதனிடை அறிவு விளக்கம் பெருகிப் பெருகி வளர்கிறது. அவ்வளர்ச்சிக்குத் துணைபுரியும் பண்பு இயற்கையிலிருக்கிறது. இது நம் முன்னோரால் காணப்பட்டதே. இதன் உண்மையில் இக்கால அறிஞர்க்கு ஐயப்பாடு விளைந்து வந்தது. இனி அவ்வையப்பாட்டுக்கு இடமிராது. அறிஞர் ஹெக்கல், டார்வின் முதலியோர் விஞ்ஞான வழியில் நிகழ்த்திய ஆராய்ச்சிகள் வெளிவந்துள்ளன. அவைகள் இக்கால அறிஞரின் ஐயப்பாடுகளைக் களையவல்லன.

உடல் வாயிலாக உயிர் பெற்றுவரும் விளக்கம் (வளர்ச்சி) உள்ளது சிறத்தல் என்பது. உள்ளது சிறத்தலே கூர்தல் ("கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்"—தொல்காப்பியம்; உரியியல், 16) என்பர் தொல்காப்பியனார். கூர்தல் அறம் உலகை வளர்த்து வருகிறது. உலக வளர்ச்சிக்கென்று, கூர்தல் அறம் இயற்கையில் அமைந்துள்ளது. கூர்தல் அறத்தை டார்வின் ஆராய்ச்சி கொண்டு முதல் முதல் எனக்கு அறிவுறுத்தியவர் தோழர் எம். சிங்காரவேல் செட்டியார். பின்னே அவ்வறத்தைப் பற்றிய உணர்வு, தியோசாபிகல் சங்கப் பேரறிஞர் சிலர் கூட்டுறவால் ஒரு வழியில் பெருகியது. இயற்கையோடியைந்து வாழ வாழக் கூர்தல் நுட்பம் தானே விளங்கிச் செல்வதை அநுபவத்தில் நன்கு தெளிதல் கூடும்.

லட்சுமிநரசு நாயுடுவும் சிங்காரவேல் செட்டியாரும் பௌத்த மதப் பிரசாரஞ் செய்வர். அதற்கு அரணை அவரால் விஞ்ஞானக் கலைகள் போதிக்கப்படும். சிங்காரவேல் செட்டியார் டார்வின் கண்ட உண்மையையும், பிறர் கண்ட நுட்பங்களையும் அறிவுறுத்துந் தொண்டில் ஈடுபட்டார். அத்தொண்டு என்போன்றோர்க்குப் பெரும் பயன் விளைத்தது.

திரு. வி. க. வின் மீது மார்க்ஸ்—மார்க்சியத்தின்—செல்வாக்கு செல்வாக்கு பற்றியும் திரு. வி. க. வின் வாழ்க்கைக் குறிப்புகளிலிருந்தே சான்றுகள்—மேற்கோள்கள் மேவுவோம்.

இரவு நிலவர் பெருமானைச் சிறுகூட்டம் சூழ்ந்து நின்றது. நானும் அவரை அணுகினேன். அவ்வேளையில் அரசியல் சம்பாஷணை உச்சநிலையடைந்திருந்தது. அதைக் குலைக்க என் உள்ளம் எழவில்லை. அவ்வரிய சம்பாஷணை என்னையும் தன் வயப்படுத்தியது. மாண்டேகு-செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தைப் பற்றி பல கேள்விகள் கேட்டேன். அவைகட்குப் பொருந்திய விடைகள் பிறந்தன. ஒத்துழையாமை விவாதம் பெரும் பொழுதைப் போக்கியது. யான் மெல்ல மெல்ல மார்க்ஸிஸத்தைத் தொட்டேன். லோகமான்யர், மார்க்ஸிஸத்தின் மீது இந்தியா நாட்டஞ்செலுத்துங் காலம் வரலாம். அதற்குள் மார்க்ஸிஸம் பலவித மாறுதலடையும். இந்தியா எதையும் தனது இயற்கையாக்கியே ஏற்கும் பண்புடையது. இப்பொழுதே விடுதலை பெற வேண்டும்; அதைக் குறிக்கொண்டு உழைப்பதே நல்லது' என்றார்.

எனது வாழ்க்கை தொடக்கத்தில் சமயப் பணியில் ஈடு பட்டது. அதனால் பல சமய ஆராய்ச்சிப் பேறு எனக்குக் கிடைத்தது. அவ்வாராய்ச்சி பொதுமை உணர்ச்சியை உண்டாக்கியது. சமயங்களின் அடிப்படையாயுள்ள பொதுமை—சமரசம்—ஏன் உலகில் பரவவில்லை என்று யான் எண்ணுவேன்; சிற்சில போது ஆழ எண்ணுவேன். எனக்கு ஒன்றும் விளங்குவதில்லை. சிங்காரவேல் செட்டியார் கூட்டுறவு சிறிது விளக்கஞ் செய்தது. அவ்விளக்கம், பொதுமையை உலகில் பரப்பி நிலைபெறுத்த வல்லது காரல் மார்க்ஸ் கொள்கை என்ற எண்ணத்தை என் உள்ளத்தில் இடம்பெறச் செய்தது.

காந்தியடிகளின் அஹிம்சை தர்மத்தில் என் மனம் சென்றது. 'அஹிம்சை நல்லதே. அது வெறும் தத்துவ உலகிலும், கவி உலகிலும் நிலவிக் கொண்டிருக்கும்; வாழ்க்கை உலகில் ஒன்றி நிலவுமா?' என்று ஐயுறுவேன். சிலவேளை ஐயம் முனைத்தெழுந்து என் நெஞ்சைத் துளைக்கும். துளைப்பு சிற்சில சமயம் மனநோயையும் உண்டு பண்ணும். அந்நோயைப் போகக மார்க்ஸ் அருளியுள்ள கொள்கை உலகில் பரவினால் வாழ்க்கை அஹிம்சையில் ஒன்றுவதாகும் என்னும் நுட்பம் எனக்குச் செவ்வனே விளங்கியது.

ஒரே வயிற்றிற் பிறந்தவர் பொருளைக்குறித்துப் போரிடுவதும், மன்றம் ஏறுவதும் என் உள்ளத்தைப புண்படுத்தும் உடன் பிறந்தவரிடத்தில் போர் மூட்டாத—அவரை மன்றம் ஏற்றாத—ஆட்சி முறை அமையுமா என்று ஏக்குறுவேன். மார்க்ஸ் நினைவு அவ்வேக்கத்தைப் போக்கும். அமைதி நினைவு தோன்றும போதெல்லாம் மார்க்ஸ் நினைவும் உடன் தோன்றுவது வழக்கமாகியது.

மார்க்ஸ் கொள்கைக்கு ஆக்கந்தேடும் அமைப்பு தொழிலாளர் இயக்கம். அவ்வியக்கத்தில் இறங்கித் தொண்டு புரியக் கீர்ஹார்டியின் காட்சியும், வேதகடேச குணாமிர்த வருஷினி சபை'யின் அழைப்பும் துணைநின்றன. வாழ்க்கையில் என்னென்னவோ மாறுதலும் வளர்ச்சியும் நிகழ்கின்றன! அவ்விசித்திரத்தை யான் என்ன என்று விளம்புவேன்?

'மார்க்ஸியம் பொருட் பொதுமையை அறிவுறுத்தும் நாத்திகமன்றோ? என்று சிலர் என்னைக் கேட்பதுண்டு. மார்க்ஸியம என்று சிலர் நாத்திகப் பிரசாரஞ் செய்வதும் எனக்குத் தெரியும். என் மனத்துக்கு மார்க்ஸியம் நாத்திகமாகத் தோன்றவில்லை. எப்படி?

மகம்மதுவின் தெய்வ ஒருமையும், கிறிஸ்துவின் அன்பும், புத்தர் தர்மமும், அருகர் அஹிம்ஸையும், கிருஷ்ணன் நிஷ்காமியமும் குமரன் அழகும், தட்சணாமூர்த்தியின் சாந்தமும் பொதுமை அறத்தை வேராகக் கொண்டவை. அப்பொதுமை அறம் என் ஓங்கவில்லை? சில தடைகள் மறிக்கின்றன. அவை யாவை? சாம்ராஜ்யங்கள், மடங்கள், சம்பிரதாயங்கள், கட்டுப்பாடுகள், கண்மூடி வழக்கவொழுக்கங்கள் முதலியன. இவற்றைப் படைத்து வளர்ப்பது எது? முதலாளி—தொழிலாளி வேற்றுமை. இவ்வேற்றுமையை ஒழிக்க வல்லது பொருட் பொதுமை. பொருட்பொதுமை, மகம்மதுவின் தெய்வஒருமையும் கிறிஸ்துவின் அன்பும் பிறவும் மன்பதையில் கால்கொள்வதற்குத் துணை செய்யும் ஆற்றல் வாய்ந்தது என்னும் நுட்பம் எனக்குப் புலப்பட்டது. அதனால் மார்க்ஸியம் என் உள்ளத்தைக் கவர்ந்தது.

உலகம் போராட்டத்துக்கு இரையாதல் கண்கூடு. மூலம் என்ன? இதுகுறித்துத் தனித்தனி ஆராய்ச்சி செய்தவர் பலர் அவருள் சிறந்தவர் காரல் மார்க்ஸ். உலகப் போராட்டத்துக்கு மூலமாக நிற்பது முதலாளி – தொழிலாளி என்னும் வேற்றுமை உணர்வென்பது மார்க்ஸ் கண்ட உண்மை. இது நடுநிலைமையில் நின்று போர்மூலத்தை ஆராயும் ஒவ்வோர் அறிஞர்க்கும் எளிதில் புலனாகும்.

பண்டை நாளில் சாம்ராஜ்யங்கள் பெருகவில்லை. அதனால் முதலாளி-தொழிலாளி உணர்வு வளராமற் கிடந்தது. இந்நாளில் சாம்ராஜ்யங்கள் பெருகியுள்ளன. அப்பெருக்கம் முதலாளி-தொழிலாளி வேற்றுமை உணர்வை வளர்ப்பதாயிற்று. அவ்வளர்ச்சி வாழ்க்கையில் போராட்டத்தைப் புகுத்தியது. போராட்டத்தை ஒழிக்கும் மருந்து காரல் மார்க்ஸுக்குக் கிடைத்தது. அது, பொதுமை அறத்தை நிலை பெறுத்தவல்ல பொருளாதார சமரசம்.

மார்க்ஸ் கண்ட பொருட்பொதுமை உலகில் புற அமைதியை நிலவச் செய்யும் மாண்புடையது. அக அமைதியை மகம்மது கிறிஸ்து அருகர் புத்தர் கண்ணபிரான் குமரன் தட்சிணாமூர்த்தி முதலியோர் கொள்கை நிலைபெறச் செய்யும். அக அமைதிக்குப் புற அமைதி வேண்டற்பாலது. புற அமைதியை உலகில் நிலவச்செயயும வல்லமை வாய்ந்த மார்க்ஸியத்தை நாத்திகம் என்று எப்படித் தளளுவது? 'மார்க்ஸியத்தைத் தள்ளுவது சான்றோரின் அமைதிச செல்வத்தைத் தள்ளுவதாகும், போராட்டத்தை அழைப்பதாகும்.

சான்றோர் அருளிய பொதுமை அறத்துக்கு ஆக்கம் தேடவே யான் மார்க்ஸின் பொருட்பொதுமைக் கொள்கையைத் தழுவுகிறேன். மார்க்ஸியத்தைச் சான்றோரின் மூலக் கொள்கைக்கு மாறாகப் பயன்படுத்தும் இயக்கங்களில் என் மனம் ஈடுபடுவதில்லை.

மார்க்ஸியம் முழுமையதா? எதிலுங் குறையுண்டு; மார்க்ஸியத்திலுஞ் சிறு குறையுண்டு. என்ன குறை? அதன் கண் 'சத்' என்னுஞ் செம்பொருள் வெளிப்படையாகக் காணப் படாமை. மார்க்ஸியத்தில் 'சத்' என்னுஞ் செம்பொருள் சேர்ந்தால் அது நிறைவுடையதாகும்.

மார்க்ஸியம் சமதர்மத்தை அறிவுறுத்துவது; சமதர் மத்தில் 'சத்' தானே சேரும். 'சத்'தைக் கொண்ட சமதர்மமே சன்மார்க்கமென்பது. சன்மார்க்கம் எது? மார்க்ஸியமும், மகம்மது கிறிஸ்து புத்தர் அருகர் கண்ணபிரான் குமரன் தட்சிணாமூர்த்தி முதலியோர் கொள்கையுஞ் சேர்ந்த ஒன்று சன்மார்க்கம். இஃது எனது கல்வி கேள்வி ஆராய்ச்சி அநுபவங்களினின்றும் கனிந்த உண்மை.

முதலாளி—தொழிலாளி வேற்றுமை உணர்வு சன்மார்க் கத்தை வளரவிடாது. சன்மார்க்க வளர்ச்சிக்கு முதலாளி—தொழிலாளி வேற்றுமை உணர்வு பொன்றியே தீர்தல் வேண்டும். வேற்றுமை உணர்வு எப்படிப் பொன்றும்? இதற்குப் புரட்சி தேவை- புரட்சிக்கு உரியது தொழிலாளர் இயக்கம் என்று சொல்ல வேண்டுவதில்லை. ஆதலின் யான் புரட்சி மனப்பான்மையுடன் தொழிலாளர் இயக்கத்தில் இறங்கினேன்.

புரட்சி இருவகை. ஒன்று அறவழியில் நிகழ்வது; மற் றொன்று மறவழியில் நிகழ்வது. அஃது அறப்புரட்சி, இது மறப்புரட்சி. உலகைச் சீர் செய்ய அறப்புரட்சி இடம் பெறாத வேளையில் மறப்புரட்சி அவ்விடத்தில் தானே நுழையும். இரண்டானும் விளையும் பயன் ஒன்றாகுமா? ஒல்லும்வகை அறப்புரட்சிக்கு இடந்தருவதே அறிவுடைமை; இல்லையேல்

> மறப்புரட்சி எழும். எனது மனத்துக்கு இயைந்தது அறப் புரட்சியே. அறப்புரட்சி வாயிலாகச் சன்மார்க்கத்தை ஓம்பவே யான் தொழிலாளர் இயக்கத்தில் ஏடுபட்டேன்.
>
> இந்நாட்டில் தொழிலாளர் இயக்கந் தோன்றி இருபத்தைந்து ஆண்டுகளாகின்றன. இருபத்தைந்து ஆண்டு அநுபவம் எனக்குண்டு. புரட்சி நிகழ்ந்ததோ? இல்லை என்றே சொல்வேன். ஓரோ வழி நிகழ்ந்ததென்று சொல்லுதல் கூடும். புரட்சி ஏன் உச்சநிலையை அடையவில்லை? சாதி மத வெறி, சம்பிரதாயக் கட்டு, மூட வழக்கவொழுக்கம் மூர்க்கப்பிடிவாதம் முதலாளி அமைப்புகளில் மோகம், தலைமைப் போராட்டம், விட்டுக்கொடுத்தல் இன்மை முதலிய தளைகள் புரட்சியைத் தகைந்து நிற்கின்றன என்று எனது அநுபவம் சொல்கிறது. இத்தளைகளை உடைத்தெறியத் தோன்றிய இயக்கங்கள் பலப்பல. அவற்றுள் சிறந்தது தொழிலாளர் இயக்கம். இது தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபட்டவர்க்கு வியப்பாகத் தோன்றாது.

இனி இக்கட்டுரையைப் 'பொருளும் அருளும் அல்லது மார்க்ஸியமும் காந்தியமும்' என்னும் தலைப்பில் திரு. வி. க. அவர்கள் தம் மறைவுக்கு இரண்டாண்டுகட்கு முன்பு யாத்துள்ள கவிதை நூலுக்கு அவர் தந்துள்ள முன்னுரைப்பகுதிகளை முடிவுரையாக்கல் பொருத்தம். அவை வருமாறு :

> மார்க்ஸியத்தின் உயிர்நாடி பொருள்; காந்தியத்தின் உயிர்நாடி அருள். இரண்டும் சேர்ந்த ஒன்று, வருங்காலப் புது உலகத்தை நல்லவழியில் அமைக்கவல்லதென்பது எனது கருத்து. அக்கருத்தை உரைநடையில் விரிந்த ஒரு நூலாக்க யான் எண்ணியதுண்டு. அவ்வெண்ணம் ஈடேறவில்லை. ஏன்? என் கண்களைப் படலம் மறைத்தமை ஒரு சிறந்த காரணம். வேறு சில காரணமும் உண்டு. ஆகவே, இந்நூலைச் சுருங்கிய முறையில் அகவற்பாவால் இயற்றலானேன்.
>
> இந்நூற்கண் மார்க்ஸியச் சாரம் பிழியப்பட்டிருக்கிறது. அதனுடன் காந்தியத்தேனும் கலந்துள்ளது. நூலின் உள்ளுறைக் கேற்பப் 'பொருளும் அருளும் அல்லது மார்க்ஸியமும் காந்தியமும்' என்னும் தலைப்புச் சூட்டப்பட்டது.

பேராசிரியர் டாக்டர் மு. வ.வை உருவாக்கிய பெருமை திருப்பத்தூர் கிறிஸ்துவ குல ஆசிரமத்துக்கு உண்டு.

அவ்வாசிரமம் பற்றி திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள் (பக். 517) கூறும் செய்தி வருமாறு :

"வட ஆர்க்காடு ஜில்லாவிலே திருப்பத்தூரிலே 'கிறிஸ்துவ குல ஆசிரமம்' என்றோர் அறச்சாலை நிறுவப்பட்டுள்ளது. அது பேடன் என்பவராலும், டாக்டர் ஏசுதாஸ் என்பவராலும் புரக்கப் பட்டு வருகிறது. முன்னவர் ஐரோப்பியர்; பின்னவர் இந்தியர். கிறஸ்துவம் அவ்விருவரையும் சகோதரராக்கியது இருவரும் ஈருடல் ஓருயிராய்த் தொண்டு செய்கிறார். யான் மடவாளஞ் சென்று திரும்பியபோது' திருப்பத்தூர் கிறிஸ்துவ குல ஆசிரமத்தில் ஓரிரவும், காலையில் சிறிது நேரமும் தங்கும் பேறு பெற்றேன். அங்கே கிறிஸ்து அறம் தாண்டவம் புரிவது கண்டேன். அவ்வாசிரமத்தில் மதமாற்றம் வலியுறுத்தப் படாமை எனக்கு மகிழ்ச்சியூட்டிற்று. ஆசிரம நூல்களில் மாணிக்கவாசகர் திருவாக்கும், மற்றவர் திருவாக்குகளும் கிறிஸ்துவம் பெற்று விளங்குவது ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கத்தக்கது.

ஆய்வுப் பேரறிஞர் திரு மயிலை. சீனி வேங்கடசாமி தமது 'கிறித் துவமும் தமிழும்' என்னும் நூலில் வீகன்பால்கு ஐயர் பற்றித் தெரி விக்கும் அரிய குறிப்புகளுள் சில:

"புரொட்டஸ்டண்டு கிறித்துவ மதத்தை முதன்முதல் தமிழ்நாட்டிற் போதித்த முதல் மிசனரி இவரே. தரங்கம் பாடியிற் கோயில்களைக் கட்டியும், அநேகரைக் கிறித்துவ மதத்திற் சேர்த்தும், சிறுவர் சிறுமிகளுக்குப் பாடசாலைகளை நிறுவியும், மதபோதனைகளைச் செய்தும், கிறித்துவமத நூல் களைத் தமிழில் மொழிபெயர்த்து அச்சிற் பதிப்பித்தும் இவர் மத ஊழியம் செய்து வந்தார்.

கஎகச ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில், இவர் தமது உடல்நலத்தைப் பேணிக்கொள்வதற்காக ஐரோப்பாவுக்குப் புறப்பட்டார். ஐரோப்பா சென்று திரும்புவதற்குள் தமிழ் மொழியை மறந்துவிடக் கூடுமே என்று அஞ்சி, தமிழைப் பழகிக் கொண்டேயிருப்பதற்காக மலையப்பர் என்னும் தமிழரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு போனார்.

...இவர் தமிழ்நாட்டிற் செய்துள்ள சமய ஊழியத்தைப் பாராட்டி, லத்தீன் மொழியில் ஒரு வரவேற்புத்தாள் படித்துக் கொடுத்தனர். இவர் அதற்கு முதலில் லத்தீன் மொழியிலும் பின்னர்த் தமிழ் மொழியிலும் பதிலளித்தார். தமிழ்நாட்டின் சார்பாகப் பதிலளித்தபடியால் தமிழில் பேசினார் போலும்.



அறிவிலே தெளிவு; நெஞ்சிலே உறுதி —பாரதி



அரசு திருந்தின் அனைத்தும் திருந்தும் —திரு. வி. க.

# தமிழிலக்கணக் கோட்பாடுகள்

பொன். கோதண்டராமன்

## தமிழ் இலக்கணம் ஒரு வரையறையும் வகைப்பாடும்

பல்வேறு பொருள்களை எடுத்து ஆராய்ந்து அவற்றிடையே உள்ள பொதுமைப் பண்பைச் சுட்டிக் காட்டுவதனைப் பொதுவாக நாம் தத்துவம் என்று நினைக்கிறோம். இப்படிப் பொதுமைப் பண்புகளைக் கண்டறிந்து சுட்டிக்காட்டுவது தத்துவத்துக்கு மட்டும் அல்ல — இலக்கணத்துக்கும் உரிய ஒரு இயல்புதான். வினைச்சொல்லை வரையறுக்க எண்ணிய தொல்காப்பியர் அது வேற்றுமை கொள்ளாது என்றும், காலக் கிளவியை ஏற்கும் என்றும் கூறும்போது வினைச்சொற்களுக்கிடையேயுள்ள பொதுமைப் பண்புகளைத் தான் எடுத்துக் கூறுகிறார்.

பொதுமைப் பண்புகளை எடுத்துச் சொல்லுவதோடு இலக்கணப் புலவர்கள் மொழியைத் தொடராகவும், சொல்லாகவும், எழுத்தாகவும் பகுத்து ஆராய்ந்து அவற்றின் இயல்புகளையும் கட்டமைப்புகளையும் எடுத்து விளக்கியிருக்கிறார்கள். இப்படி விளக்கும்போது மொழியை ஆழமாகவும், அகலமாகவும், ஆராய்ந்தே அவர்கள் விளக்கம் அளித்திருக்கிறார்கள். நம்முடைய இலக்கணங்கள் யாவும் நமது மொழியையும் நமது இலக்கியங்களையும் நன்கு புரிந்து கொள்ளத்தக்க வகையில் அவற்றை எளிமைப்படுத்தி விளக்குகின்ற கருவிகள்தான் என்றால் அது முற்றும் பொருந்தும். பழைய இலக்கியங்களைப் பயிலும்போது அருமைப்பாடும் இடர்ப்பாடும் நம்மை எதிர் கொள்ளுவது உண்டு. அப்போதெல்லாம் அருமையை எளிமையாக்கி இடர்ப்பாட்டைக் கடக்க உதவுவது இலக்கணந்தான். மேலும் நமது மொழியைப் பிற மொழியாளர்க்குக் கற்பிக்கும்போது எளிதாகவும், தெளிவாகவும் அவர்களுக்குக் கறபிக்க உதவுவதும் இலக்கண அறிவுதான்.

உலகிலுள்ள மற்ற மொழியினரும் மற்ற பண்பாட்டினரும், இலக்கணம் என்றால் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், தொடரிலக்கணம் ஆகிய இவற்றைப் பற்றி மட்டுமே கருதுகின்றனர். ஆனால் தமிழ் மரபு இலக்கண எல்லையை இதற்கு மேலும் விரிவு செய்திருக்கிறது. எழுத்து, சொல், தொடர் ஆகியவற்றோடு மொழியில் உள்ள இலக்கியங்களைப் பற்றிய ஆய்வையும் தமிழ் மரபு இலக்கணத்திலேயே அடக்கிக் கொண்டிருக்கிறது.

இலக்கணப் புலவர்கள் பேச்சு வழக்கு இலக்கிய வழக்கு நாடக வழக்கு ஆகிய மூவகை வழக்குகளையும ஆயவிற்கு எடுத்துக் கொண்டே இலக்கணம் அமைத்திருக்கிறார்கள். நாடக வழக்கென்பது பேச்சு வழக்கு இலக்கிய வழக்கு ஆகிய இரண்டையும் தழுவிச் செல்வதோடு சிற்சில இடங்களில் புதிய சொற்களையும் தொடர்களையும் முழுக்க முழுக்கப் புது நெறியில் படைத்துக் கையாளுவதையும் மரபாகக் கொண்ட ஒரு மொழி நடை எனலாம்.

இலக்கணப் புலவர்கள் இங்கே குறிப்பிட்ட மூவகை வழக்குகளையும் கருத்தில் கொண்டுதான் இலக்கணங்களை அமைத்திருக்கிறார்கள் என்பதற்குத் தொல்காப்பியத்திலும் அதற்குப் பின்வந்த தமிழ் இலக்கணங்களிலும் மிகப் பல சான்றுகளைக் காட்டலாம்.

தமிழ் இலக்கண மரபில் இலக்கிய ஆய்வுக்கு மிகச் சிறந்த ஒரு இடத்தைத் தந்திருக்கிறார்கள் என்பது ஆய்வு நோக்கில் நன்கு எண்ணிப் பார்க்கும் போது தெளிவாகப் புலப்படும்.

தொல்காப்பியத்தில் உள்ள எழுத்ததிகாரம் எழுத்திலக்கணம் பற்றியும் சந்தி இலக்கணம் பற்றியும் பேசுகிறது. எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட இலக்கணச் செய்திகள் மேலே கூறிய மூவகை வழக்குகளுக்கும் பொதுவாக அமைந்தவை. செய்யுளுக்கே உரிய செய்திகள் வரும்போது நூலாசிரியர் இவை செய்யுட்கே உரியன என்று தெளிவாகக் குறிப்பிட்டுச் செல்வது மரபு.

சொல்லதிகாரத்தில் சொற்றொடர் இலக்கணமும் சொல்லிலக்கணமும் பேசப்படுகின்றன. சொற்றொடர் இலக்கணத்தைப் பேசும்பொழுது முற்றுத் தொடர், எச்சத் தொடர், தொகைநிலைத் தொடர், தொகாநிலைத் தொடர் ஆகியன பற்றியும் உரையாடலில் தொடர்கள் அமையும் முறை பற்றியும் பேச வேண்டிய தேவை ஏற்படுகிறது. சொல்லதிகாரத்தில் இப்படிப்பட்ட செய்திகளை நாம் காண்கிறோம். எழுத்ததிகாரத் தொடர்பாக மேலே குறிப்பிட்டது போலச் சொல்லதிகாரத்திலும் பேச்சு வழக்கு இலக்கிய வழக்கு நாடக வழக்கு ஆகிய மூவகை வழக்குகளுக்கும் உரிய செய்திகள் பேசப்படுகின்றன. செய்யுளுக்கே உரியன எவை என்பது தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொருளதிகாரம் முழுமையும் இலக்கிய ஆய்வாகவே அமைந்துள்ளது. இலக்கிய ஆய்வில் ஈடுபடும் யாரும் இலக்கியத்திலுள்ள பாடுபொருள், இலக்கிய வடிவம், விளம்பு முறை ஆகியவற்றைப் புறக்கணிக்க இயலாது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இத்தகைய ஆய்வுக்குச் சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. பாடுபொருள்களையும் இலக்கண அறிஞர்கள் அகம் புறம் என இரண்டாகப் பிரித்தனர். இலக்கிய வடிவம் ஆராயப்படும் பொழுதே யாப்பு பற்றியும் பேச வேண்டிய தேவை ஏற்படுகிறது. உவமை உருவகம் போன்றன எல்லாம் விளம்பு முறை பற்றிய ஆய்வில் அடங்கும். தொல்காப்பியப் பொருளதிகாரம் முழுவதும் அக்கால அறிஞர்களின் கருத்துப்படி அமைந்த இலக்கியக் கோட்பாடுகள் என்று சொன்னால் தவறில்லை.

எழுத்து, சொல், யாப்பு ஆகியவற்றைப் பற்றிய ஆராய்ச்சியெல்லாம் இலக்கிய ஆராய்ச்சி என்ற எல்லையை எட்டுகின்ற துணைக் கருவிகளே என்றால் கூடத் தவறில்லை. இறையனார் களவியல் உரைகாரர் அவர் காலத்திலேயே இந்த நோக்கில்தான் சிந்தித்திருக்கிறார்.[2]

தொல்காப்பியர் காலத்தில் பொருளதிகாரத்தில் அடக்கிக் கொள்ளப் பட்ட ஆய்வுச் செய்திகள் காலப் போக்கில் படிப்படியாகக் கிளைத்து வளர்ந்தன. இறையனார் களவியலுக்கு உரை எழுந்த காலத்தில் இலக்கணம் எழுத்து சொல் யாப்பு பொருள் என்று நான்காகக் கிளைத்தது. தண்டி ஆசிரியர் காலத்தில் இலக்கணம் எழுத்து சொல் யாப்பு பொருள் அணி என்று ஐந்தாகக் கிளைத்தது. இப்படி இலக்கணங்கள் கிளைத்த காலத்தில் இலக்கிய வகைகளைப் பற்றிய ஆய்வு படிப்படியாகப் பார்வை யிலிருந்து ஒதுங்கி வந்திருக்கிறது. சிற்றிலக்கியங்கள் பெருகிய காலத்தில் இலக்கிய வகைகளைப் பற்றிய ஆய்வுக்குத் தேவை ஏற்பட்டு விட்டது. ஏறத்தாழத் தண்டி ஆசிரியர் காலத்தை ஒட்டியே இலக்கிய வகைகளைப் பற்றிய ஆய்வுக்குத் தேவை ஏற்பட்டு விட்டது. ஏறத்தாழத் தண்டி ஆசிரியர் காலத்தை ஒட்டியே இலக்கிய வகைகளைப் பற்றிய ஆய்வும் பாட்டியல் என்ற பெயரில் வளரத் தொடங்கியது. கி. பி. 10 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தமிழிலக்கணம் எழுத்து சொல் யாப்பு பொருள் அணி பாட்டியல் என்று ஆறாகக் கிளைத்தது.

பாட்டியல் என்பது அறிஞர்க்கு மட்டுமே தெரிந்த உயர்நிலை இலக்கணமாதலாலும் பஞ்ச லட்சணம் என்ற தொடர் வழக்கு வலிமை பெற்று விட்டதாலும் இலக்கணம் என்றாலே ஐந்து பிரிவுகளை உடையது என்று தவறாக ஒரு கருத்து நிலைபெற்று விட்டது.

மொழியைப் பற்றியும் இலக்கியத்தைப் பற்றியும் வலிமை வாய்ந்த தமிழ் மாபில் ஆய்வுகள் மெதுவாக நடந்தாலும் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருந்திருக்கிறது. எழுத்து சொல் பொருள் என மூன்றாக இருந்த இலக்கணப் பிரிவுகள் காலப் போக்கில் ஆய்வு வளர்ச்சிக் கேற்ப நான்காகவும் ஐந்தாகவும் ஆறாகவும் கிளைத்து விரிந்து விளக்கம் பெற்றுள்ளன.

பதினெட்டு அல்லது பத்தொன்பதாம் நூற்றாண்டிற்குப் பிறகு செய்யுள் நூல்களுக்கு இருந்த செல்வாக்கினை விட உரைநடை நூல்களுக்குச் செல்வாக்கும் தேவையும் வளரத் தொடங்கியது. நூல்கள் அச்சுவடிவம் பெற்றுப் பொதுமக்கள் கைக்கு எட்டியதாலும் கல்வி மக்கள் மயமான தாலும் உரைநடையின் செல்வாக்கு வளரத் தொடங்கியது. இந்த மாற்றத்தினால் இலக்கணச் சிந்தனையோட்டத்திலும் சில குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நேர்ந்து வருகின்றன. பழையமரபுகளைப் புரிந்து கொண்டு அவற்றில் தேவையானவற்றை ஏற்றுக்கொண்டு புதிய நோக்கில் புதிய முறையில் இலக்கணச் சிந்தனை ஓட்டத்திற்கு விளக்கம் தந்து மொழி ஆய்வையும் இலக்கிய ஆய்வையும் திட்டமிட்டு வளர்த்து ஆய்வுப் பணிகளை விரைவுபடுத்தி முன்னேற வேண்டிய கட்டாயத் தேவை இன்று நமக்கு ஏற்பட்டுவிட்டது.

இன்றைய நிலையில் நம்முடைய ஆராய்ச்சி முடிவுகளையெல்லாம் பொருட் குழப்பமில்லாத தெளிவான உரைநடையில் வழங்க வேண்டி யிருக்கிறது. நம்முடைய ஆய்வு முடிவுகளைச் செய்யுளில் இன்னும் எழுத

முடியும் என்றாலும் அவற்றுக்கு இக்காலத்தும் உரையும் விளக்கமும் எழுத முடியும் என்றாலும் இன்றைய சமுதாயச் சூழல் அத்தகைய பணிகளுக்கு ஏற்பு அளிப்பதாகத் தெரியவில்லை. இந்தச் சூழலில் நம்முடைய பழைய இலக்கண மரபையும் பழைய இலக்கணப் புலவர்களின் இலக்கணக் கோட்பாடுகளையும் விளக்கித் தெளிவு படுத்துவது இப்போது ஒரு இன்றியமையாத தேவையாகி விட்டது.

உரைநடையிலேயே உயர் ஆய்வுகள் எல்லாம் வெளிவர வேண்டும் என்ற சூழ்நிலை ஏற்பட்ட பிறகு நாம் இப்போது ஒரு புதிய தொடக்கத்தை உருவாக்குவதால் பழைய மரபுகளையும் கோட்பாடுகளையும் உரைநடையில் எழுதி விளக்க வேண்டியிருக்கிறது.

பழைய இலக்கணக் கோட்பாடுகளை நன்றாக விளங்கிக்கொண்டு மொழி ஆய்வினையும் இலக்கிய ஆய்வினையும் நம்முடைய மரபுக்கேற்ற வகையில் சரியான திசையில் நடத்திச் செல்ல இலக்கணக் கோட்பாட்டுச் சிந்தனைகள் பெரிதும் உதவும் என்று உறுதியாக நம்புகிறேன்.

## வகைப்பாடும் பெயரீடும்

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பொருளைப் பகுத்து ஆராய்ந்து வகைப் படுத்தி ஒவ்வொரு வகைக்கும் முறையாக ஒரு பெயரிடுவது அறிவியல் துறைகள் எல்லாவற்றுக்கும் பொருந்திய இன்றியமையாத ஒரு முதன்மைப் பணி எனலாம். ஆய்வுப் பொருளைப் பகுத்தறிந்த பிறகு பகுக்கப்பட்ட உட் கூறுகளை வகைப்படுத்துவதற்கு ஒரு இன்றியமையாத அடிப்படை வேண்டும். வகைப்படுத்திய பொருள்களுக்கு முறையாகப் பெயரிடுவதற்கும் பொருத்த மான அடிப்படை ஒன்று வேண்டும்.

## வகைப்பாட்டின் அடிப்படை

பகுக்கப்பட்ட உட்கூறுகளைப் பொதுவாக உருவத்தின் அடிப் படையிலும் தன்மை அல்லது செயற்பாட்டின் அடிப்படையிலும் வகைப் படுத்தலாம். எடுத்துக்காட்டாகத் தமிழில் உள்ள சொற்களை ஓரசைச் சொல் ஈரசைச் சொல் என்றும் ஓரெழுத்தொரு மொழி ஈரெழுத்தொரு மொழி என்றும் வடிவ அடிப்படையில் வகைப்படுத்தலாம். வேற்றுமை ஏற்கும் சொற்களை ஒருவகையாகவும் கால இடை நிலைகளை ஏற்கின்ற சொற்களை இன்னொரு வகையாகவும் வகைப்படுத்திய முறைமையினைச் செயற்பாட்டின் அடிப்படையில் எழுந்த வகைப்பாடு எனலாம். ஆய்வில் நாம் ஏற்படுத்தும் வகைப்பாடுகள் பயன் கருதியது. பயன்படாத முறையில் வகைப்பாடுகளை அமைப்பது தேவையற்ற வேலை. இதனால்தான் தமிழி லக்கணப் புலவர்கள் எழுத்துகளின் அடிப்படையில் ஓரெழுத்தொரு மொழி, ஈரெழுத்தொரு மொழி, இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி என்று மூன்று வகையோடு நிறுத்திக் கொண்டு, நானெழுத்து மொழி, ஐந் தெழுத்து மொழி, ஆறெழுத்து மொழி என்றெல்லாம் கருதாமல் விடுத்தனர்.

ஆய்வுக்குரிய பொருளைப் பெரும் பிரிவாகப் பிரித்த பிறகு ஒவ்வொரு பிரிவிலும், தேவைப்படும்போது, உட்பிரிவுகளையும் ஆக்கிக் கொண்டு அவற்றையும் வகைப்படுத்திப் பெயரிடுவர். எழுத்துகளை உயிரென்றும் மெய்யென்றும் இரண்டு பெரும பிரிவாகப் பிரித்துக் கொண்டு உயி ரெழுத்தில் குறில், நெடில் எனவும் மெய்யெழுத்தில் வலி, மெலி, இடை எனவும் உட்பிரிவுகளை ஆக்கிக் கொண்டு எழுத்திலக்கணம் கூறியிருப்பதை நோக்குங்கால் நாம் மேற்கூறிய உண்மை நன்கு விளங்கும். உட்பிரிவுகள் தேவைப்படுகின்ற அளவுக்கு மேலும் மேலும் பிரிக்கப்படுவது உண்டு. அப்படிப் பிரிக்கின்ற பிரிவுகள் பிரிக்கப்பட்ட தனியொரு உள் உறுப்பைச் சுட்டுகின்ற அளவுக்குச் செல்லக் கூடும்.

இக்கருத்தைக் கீழ்க்காணும் உயிர் வகைப்பாட்டுப் படம் மேலும் விளக்கும்.




ஐ, ஒள ஆகிய இரண்டும் இக்கால வழக்கின்படி ஏனைய உயிர்களினின்றும் வேறுபட்ட இயல்பினவாதலால் அவை மேற்காட்டிய படத்தில் இடம் பெறவில்லை.

ஒரு பொருளைப் பகுத்துப் பார்க்கும்போது கூடப் பயனில்லாத பகுப்பு கூடாது என்பதனை நமது இலக்கணப் புலவர்கள் மிக நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். அதனால்தான் பகாப்பதத்தை வரையறுக்க வந்த நன்னூலார்,

> பகுப்பால் பயனற் றிடுகுறி ஆகி
> முன்னே ஒன்றாய் முடிந்தியல் கின்ற
> பெயர் வினை இடை உரி நான்கும் பகாப்பதம்[3]

என்று வரையறை செய்கின்றார். அடிப்படையும் நோக்கமும் இல்லாத பகுப்பும் வகைப்பாடும் கைவிடப்பட வேண்டிய ஒன்றாகும். ஆய்வின் தொடக்கத்தில் மேற்கொள்ளப்பட்ட ஒரு வகைப்பாடு ஆய்வின் இறுதி வரையிலும் பயன்படாமலே போகும் என்றால் அந்த வகைப்பாட்டினைக் கைவிட்டு விட்டு ஆய்வை மீண்டும் பார்த்துச் சீர் செய்வது நல்லது.

சார்பெழுத்துகளை ஆராய்ந்து அவற்றைப் பத்து என்று வகைப் படுத்தி விட்டு அவற்றையே மூந்நூற்று அறுபத்தொன்பது என்று நன்னூலார் விரித்துக் கூறுகிறார்.[4] இப்படி மூந்நூற்று அறுபத்தொன் பதாக விரித்துக் கூறிய ஆய்வுப் பகுதி அவருடைய இலக்கண நூலில்

வேறு இடங்களில் எந்த வகையிலும் பயன்பட்ட ஒன்றாகக் கருத இயல வில்லை. ஆகவே இந்த விரிந்த வகைப்பாடு தேவைதானா என்பது சிந்தனைக்கு உரியதாக உள்ளது.

பகுக்கப்பட்ட பொருள்களை வகைப்படுத்தும்பொழுது ஒரே நோக்கில் நாம் பல்வேறு அடிப்படைகளை மனதில் கொண்டு வகைப்படுத்துவது பொருந்தாது. விளக்கமாகச் சொன்னால், சொற்களை வகைப்படுத்தும் போது அவற்றை 1. எழுத்தெண்ணிக்கையில் வகைப்படுத்தலாம். 2. அசை யெண்ணிக்கையில் வகைப்படுத்தலாம். 3. மொழியில் சொற்கள் இயங்கும் தன்மைக்கேற்ப வகைப்படுத்தலாம். 4. அவை பயன்படும் இடம் செய்யுளா உரைநடையா என எண்ணி அதற்கேற்ப வகைப்படுத்தலாம். ஆனால் இந்த எல்லா அடிப்படைகளையும் ஒரே நோக்கில் மனதில் கொண்டு சொல் வகைக்குப் பெரிய பட்டியல் போடுதல் கூடாது.[5]

நமது இலக்கணப் புலவர்கள் இதை நன்கு மனத்தில் இருத்திக் கொண்டுதான் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என்றும் இயற் சொல், திரிசொல், திசைசொல், வடசொல் என்றும் தனித்தனியே தனித்தனி நோக்கிலும் தனித்தனி அடிப்படையிலும் வகைப்படுத்தி யுள்ளார்கள்.

ஒரு நூலாசிரியன் தனக்கு முன் இருந்த வகைப்பாடுகளையும் தழுவிக் கொண்டு தான் சில புதிய வகைப்பாடுகளை உருவாக்கி நடைமுறைப் படுத்தும்பொழுது அவன் மிகவும் விழிப்பாக இருக்க வேண்டும்; இல்லையேல் அவனுடைய ஆய்வால் ஏற்படுகின்ற தெளிவைக் விடக் குழப்பமே மிகுதியாகி விடும். யாப்பிலக்கண வரலாற்றில் இப்படிச் சில குழப்பங்கள் ஏற்பட்டு விட்டன எனலாம். ஒரு செய்யுளின் அடியினை ஆராய்ந்து வகைப்படுத்தும்போது மிக முற்காலத்தில் எழுத்தெண்ணிக் கையின் அடிப்படையில் அப்போதைய யாப்பறி புலவர்கள் அடிகளை வகைப் படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. சீர் பற்றிய கோட்பாடும் தளை பற்றிய கோட்பாடும் யாப்புலகில் தோன்றிய பிறகு அடிகளைச் சீரின் அடிப் படையிலும் தளையின் அடிப்படையிலும் வகைப்படுத்தும் போக்கு தோன்றியது.[6] இவற்றை நன்கு வேறுபிரித்து உணராதவர்கள் சீர்வகை அடிகளையும், தளைவகை அடிகளையும் எழுத்து வகை அடிகளிலேயே அடக்கிக் காட்ட முற்பட்டுப் பெரிதும் இடர்ப்பட்டனர். எனவே ஒரு ஆய்வாளன் புதிய வகைப்பாட்டை உருவாக்கும் போதும், புதிய பெயர்களை அல்லது குறியீடுகளைக் கையாளும்போதும் தான் மேற்கொள்ளும் வகைப்பாடு பற்றியும் பெயரீடு பற்றியும் மயக்கத்துக்கு இடமில்லாத வகையில் தெளி வாக விளக்குதல் இன்றியமையாததாகின்றது. நன்னூலார் தமது நூலில் பதவியல் பற்றி விளக்கித் தாம் கையாளும் குறியீடுகளையும் தெளிவாக வரையறுத்திருப்பது இங்கே சிறப்பாகப் போற்றிக் குறிப்பிடத்தக்கதாகும்.

## பெயரீடு

பகுக்கப்பட்ட பொருள்களை வகைப்படுத்திய பிறகு ஒவ்வொரு வகைக்கும் மயக்கமில்லாத வகையில் பெயர் அல்லது குறியீடு தருதல் ஆய்விற்கு மிக இன்றியமையாததாம். பெரும்பிரிவுகளுக்குப்

பெயரிடுவதோடு மேலும் மேலும் பிரிக்கப்படுகின்ற உட்பிரிவுகள் எல்லா வற்றுக்கும் பெயரிடப்பட வேண்டும். அப்படிப் பெயரிடும்போது ஆய் வாளன் இடுகுறியாகவும் பெயரிடலாம் ஏதாவது ஒரு காரணம் பற்றிய தாகவும் பெயரிடலாம். ஒரு காரணம் பற்றியதாகப் பெயரிட்டால் பிறர் அதனை எளிதில் நினைவிற்கொள்ள உதவியாகும் என்பதால் காரணம் பற்றியதாகப் பெயரிடுவதைப் பொதுவாக எல்லோரும் வரவேற்பர். எப்படிப் பெயரிட்டாலும் தனது ஆய்வில் ஒரு பெயர் அல்லது குறியீடு இன்ன பொருளில் அல்லது இன்னதைக் குறிக்க ஆளப்படுகிறது என்பதை ஆய்வாளன் தெளிவாக வரையறுத்துக் கூறவேண்டும். நன்னூலார் பதவியலில் இந்தக் கோட்பாட்டை நன்கு பின்பற்றியிருப்பது இங்கே நினையத்தக்கது. நன்னூலில் பொதுப் பாயிரப் பகுதியில் நூலுக்குப் பெயரிடுதல் பற்றி நன்னூலார் கூறியுள்ள செய்திகள் இங்கே நினைந்து மகிழத்தக்கது. முதல் நூலாலும் கருத்தனாலும் நூலின் அளவினாலும் நூலில் மிகுதியாகப் பேசப்பட்ட பொருளாலும், நூல் நுவன்ற பொரு ளாலும், செய்வித்தோனாலும் நூலின் தன்மையாலும் ஒரு நூலுக்குப் பெயர் அமையலாம். இவையெல்லாம் காரணம் பற்றி அமைந்த பெயர்கள்; இவையன்றி இடுகுறியால் கூட ஒரு நூலுக்குப் பெயர் அமைவதுண்டு. இப்படி நன்னூலார் கூறியிருப்பதை எண்ணிப் பார்க்கும்போது குறியீடு அல்லது பெயரீடு பற்றி அவர் வேறொரு சூழலில் வேறொரு வகையில் நன்கு சிந்தித்திருக்கிறார் என்பது நமக்கு இனிது விளங்குகிறது.

பெரும் பிரிவுகளுக்கும் உட்பிரிவுகளுக்கும் பெயரிடுவதன் நோக்கம் அவற்றைப் பற்றி வெவ்வேறு இடங்களில் நூலில் குறிப்பிட வேண்டிய தேவை வரும்போது மயக்கமில்லாமல் பெயர் சுட்டிக் குறிப்பிட உதவி யாகும் என்பதேயாம். இப்படிப் பெயரிடும்போது வகை ஒன்று, வகை இரண்டு, வகை மூன்று என்றோ அல்லது அ, ஆ, இ என்றோ பெயரிட்டால் கூடத் தவறில்லை. ஆகவே பெயரீட்டை மட்டும் மையமாக வைத்து ஆய்வில் வீண் விவாதங்களை எழுப்ப வேண்டியதில்லை. காலப் போக்கில் ஒரே வகைப்பாட்டைச் சுட்டப் பல்வேறு பெயர்கள் கூடத் தோன்றலாம்; பொருத்தமான பெயர்கள் நிலை நிற்கும். காலப் போக்கில் நீண்ட தொடர்கள் கூடச் சுருங்கிய தொகையாகி ஒரு சொல் நீர்மைத்தாய்க் கலைச்சொல் இயல்பு பெறும். தொல்காப்பியர் தம் நூலில் கூறிய பெயரெஞ்சு கிளவி என்ற தொடரும் வினையெஞ்சு கிளவி என்ற தொடரும் சுருங்கிய பெயர்களாகிப் பெயரெச்சம், வினையெச்சம் என்று நன்னூலார் காலத்தில் கலைச்சொல் இயல்பு பெற்றதனை ஈண்டு எண்ணிக் காண்க.

நாம் முன்பே குறிப்பிட்டதுபோல ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பொருளைப் பகுத்தாராய்ந்து வகைப்படுத்துவதும் பெயரிடுவதுமாகிய பணிகள் நம்முடைய இலக்கணங்களில் மிக இன்றியமையாத ஒரு சிறப் பிடத்தைப் பெற்றிருக்கின்றன. இந்த உண்மை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, பாட்டியல் ஆகிய எல்லா இலக்கணப் பகுதி களுக்கும் பொருந்தும். இலக்கணக் கோட்பாடுகளிலேயே வகைப்பாடும் பெயரீடும் மிக இன்றியமையாத அடிப்படைக் கோட்பாடுகள் எனலாம்.

எழுத்திலக்கணத்தில் எழுத்துகளை உயிரென்றும் மெய்யென்றும் பெரும் பிரிவாகப் பிரித்திருப்பதையும் உயிரைக் குறில், நெடிலென்றும் மெய்யை வலி, மெலி, இடை என்றும் பிரித்து அவற்றின் உட்பிரிவுகளை ஆராய்ந்து மேலும் பிரித்திருப்பதையும் இங்கே எண்ணிக் காண்க. இவ்வாறே சொல்லிலக்கணத்தில் சொற்களை நான்கு வகையாகப் பிரித்துப் பெயர், வினை, இடை, உரி என்று பெயரிட்டிருப்பதையும் அந்தப் பெயர், வினை, இடை, உரி ஆகியவற்றை மேலும் ஆராய்ந்து அவற்றின் உட்பிரிவுகளையும் பிரித்து வகைப்படுத்தி இருப்பதையும் இங்கே எண்ணிப் பார்ப்பது பொருந்தும். யாப்பு, அணி, பொருள், பாட்டியல் ஆகிய இலக்கணங்களில் இந்த வகைப்பாட்டுப் பெயரீட்டுக் கோட்பாடுகள் நன்கு பொருந்துமாற்றை நீங்களே பொருத்திக் காணலாம்.

## சார்பெழுத்துக் கோட்பாடு

தொல்காப்பியர் நமக்கு வழங்கிய முதல் நூற்பாவிலேயே முதலெழுத்து, சார்பெழுத்து ஆகிய இரண்டையும் பற்றிக் குறிப்பாகப் பேசுகிறார். அகரம் முதலாக னகரம் ஈறாக உள்ள முப்பது எழுத்துகளையும் முதலெழுத்து என்றும் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றினையும் சார்பெழுத்துகள் என்றும் உரையாசிரியர்கள் விளக்கம் கூறுவர். சார்பெழுத்து என்ற சொல்லைத் தொல்காப்பியர் நேரடியாக ஆளவில்லை எனினும் இதே பொருளில் முதல் நூற்பாவில் 'சார்ந்துவரல் மரபின்மூன்று' என்ற தொடரைப் பயன்படுத்தியிருக்கிறார் என்பது நமக்குத் தெளிவாக விளங்குகிறது. பிற்கால இலக்கணப் புலவராகிய நன்னூலார் சார்பெழுத்து என்ற சொல்லை ஒரு இலக்கணக் கலைச் சொல்லாகவே கையாளுகிறார். சார்பெழுத்து என்ற கலைச்சொல் தொல்காப்பியர் காலத்தில் உருவாகவில்லை எனினும் சார்பெழுத்து பற்றித் தெளிவான ஒரு கோட்பாடு இருந்திருக்கிறது என்பது தெளிவாக விளங்குகிறது.

தொல்காப்பியர் எழுத்துகளை இரண்டு பெரும் பிரிவாகப் பிரித்துக் கொண்டார். முதற் பிரிவில் பன்னிரண்டு உயிரெழுத்துகளையும் பதினெட்டு மெய்யெழுத்துகளையும் சேர்த்து எழுத்தென்று சொல்லப்படுவன முப்பது என்றார். இவற்றையே பிற்காலத்தார் முதலெழுத்து என்றனர். இரண்டாவது பிரிவில் குற்றயலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்றினையும் சேர்த்து 'சார்ந்துவரல் மரபின் மூன்று, என்று குறித்தார். இவற்றையே பிற்காலத்தார் சார்பெழுத்து என்றனர்.

தொல்காப்பியர் கூறும் முதலெழுத்துகள் முப்பதும் தமிழ் மொழியின் வேர்ச்சொற்களுக்கும் அடிச்சொற்களுக்கும் உறுப்பாக வருவன. சார்பெழுத்துகள் மூன்றும் அவ்வாறு வர இயலாதனவாய்க் காணப்படுகின்றன. இவற்றை முறையாக ஆராய்ந்து பார்ப்போம்.

## குற்றியலிகரம்

நிலைமொழியீற்றுக் குற்றியலுகரம் வருமொழியில் யகரம் வரும் பொழுது இகரமாய்த் திரியும். இந்த இகரத்தையும் மியா என்ற அசைச் சொல்லில்

உள்ள இகரத்தையும் குற்றியலிகரம் என்பர். இந்த இருவகைக் குற்றிய லிகரமும் தனிப்பட்ட வேர்ச்சொல்லில் அமையாமல் தொடர்ச்சொல்லி லேயே அமைந்திருத்தல் காண்க.

(எ—டு) கொக்கு—யாது > கொக்கியாது
மூன்று—யாண்டு > மூன்றியாண்டு
கேண்மியா
சென்மியா

## குற்றியலுகரம்

தமிழ் மொழியில் நாம் காணும் குற்றுகர ஈற்றுச் சொற்கள் யாவும் பொதுவாக வேர்ச்சொல்லை விடச் சற்று நீளமானவையே எனலாம். குற்றுகர ஈற்றுச் சொற்களோடு வருமொழி முதலில் உயிர் பெற்றுச் சொற்கள் சேரும்பொழுதுதான் ஏனைய உகரத்துக்கும் குற்றுகரத்துக்கும் உள்ள வேறுபாட்டை நாம் தெளிவாக உணருகிறோம். வருமொழி முதலில் உயிர் வரும்பொழுது குற்றுகரம் அறவே மறைந்து எஞ்சி நின்ற மெய்யின் மேல் உயிர் ஏறுகிறது. இத்தகைய மாற்றம் முற்றுகரங்களுக்கு நடப்பதில்லை.

இதிலிருந்து நாம் ஊகித்துணரும் செய்தி வருமாறு: இன்று நாம் முற்றுகரமாகக் கருதும் உகரம் சொல்லின் ஒரு அங்கமாவதால் அது மறைவதில்லை. குற்றுகரம் என்று கருதும் உகரம் சொல்லின் அங்கமாக அமையாமல் முயற்சி எளிமைக்காக வல்லொற்றுகளின் பின் சேர்க்கப் பட்டிருத்தலால் வருமொழியில் உயிர் வரும்பொழுது நிலைமொழி ஈற்றில் நாம் சேர்த்த உகரம் மறைகிறது. ஆகவே குற்றுகரம் வேர்ச்சொல் அல்லது அடிச்சொல்லின் ஒரு அங்கமல்ல என்பது தெளிவு.

(எ—டு) நாடு—அல்ல > நாடல்ல
ஆறு—அல்ல > ஆறல்ல
கரு—அல்ல > கருவல்ல
மறு—அல்ல > மறுவல்ல

குற்றுகரத்தை உகரத்தோடு ஒப்ப வைத்து நோக்குதல் தொல்காப்பியர்க்கு உடன்பாடில்லை. குற்றியலுகரப் புணரியல் என ஒரு தனி இயலை அவர் அமைத்திருப்பதே இக்கருத்தை விளக்கும்.[9]

## ஆய்தம்

ஆய்த எழுத்தும் தமிழில் உள்ள வேர்ச்சொல் அல்லது அடிச் சொல்லின் அங்கமாக அமைவதில்லை. எஃகு என்ற சொல்லைப் பார்க்கும் போது இந்தக் கருத்தில் ஐயம் எழலாம். எஃகு என்ற சொல் எவ்-கு என்று பிரிக்கத் தக்க வகையிலேயே அமைந்துள்ளது. எவ் என்பதில் உள்ள வகரம் வருமொழியில் ககரம் வரும்பொழுது ஆய்தமாக ஒலிக்கிறது. அவ்—கடிய > அஃகடிய என்று மாறும் என்பதற்குத் தொல்காப்பியப் பெருந்தகையே விதிகூறிச் செல்வது இங்கு நினையத் தகுந்தது.[10] எஃ

என்ற அடிச்சொல்லும் ஏ என்ற சொல்லும் ஒரு பொருளன. இந்தச் சொல்லின் முதன்மைப் பொருள் இரும்பு என்பதேயாம். பிற்காலத்தில் இச்சொல் இரும்பினாலாகிய அம்பைக் குறித்தது. அஃது இஃது முதலாய சொற்களும் கஃசு, கஃபு முதலாய சொற்களும் மேற்கூறியவாறே பிரிக்கத் தக்க சொற்கள் என்பதையும் ஒரு மொழியில் வல்லினம் வரும்போது நிலை மொழியில் உள்ள வகாரவீறு ஆய்தமாக ஒலிக்கிறது என்பதையும் இங்கே நன்கு எண்ணிப் பார்த்து உணர்ந்து கொள்ளலாம்.[11]

முன்பே நாம் குறிப்பிட்டபடி சார்பெழுத்துகள் வேர்ச்சொல் அல்லது அடிச்சொல்லில் ஒரு அங்கமாக வாரா என்பதும் அவை தொடர்ச்சொல்லிலேயே அமைகின்றன என்பதும் இப்போது நன்கு விளங்கியிருக்கும். இதையே சற்று வேறு விதமாகச் சொன்னால் சார்பெழுத்துகளைத் தமிழ் மொழியின் அடிப்படை எழுத்துகளாகக் கொள்ள இயலாது எனலாம். இந்த எழுத்துகளுக்குத் தமக்கென்று தனிப்பட்ட பிறப்பிலக்கணம் இல்லை. இன்ன உறுப்பு, இன்ன உறுப்போடு இன்ன முறையில் பொருந்துவதால் இன்ன எழுத்து பிறக்கும் என்று தொல்காப்பியர் முதலெழுத்துகளுக்குப் பிறப்பிலக்கணம் கூறுகிறார். ஆனால் சார்பெழுத்துகளுக்கு அவர் அவ்வாறு பிறப்பிலக்கணம் கூறவில்லை. சார்பெழுத்துகள் என்று தொல்காப்பியர் மூன்றை மட்டும் குறிப்பிட்டிருப்பதையும் பிற்கால இலக்கண ஆசிரியர்கள் சார்பெழுத்துகளைப் பற்றிப் பல்வேறு வகையில் பேசியிருப்பதையும் இங்கே சற்று எண்ணிப் பார்ப்பது தகும்.

தொல்காப்பியப் பெருந்தகை ஒலி வடிவ அடிப்படையில் சார்பெழுத்துகளைப் பற்றிப் பேசியிருக்கிறார் என்று தெளிவாக மேலே விளக்கிக் காட்டினோம். பிற்கால இலக்கணப் புலவர்கள் ஒலிவடிவ அடிப்படை, வரி வடிவ அடிப்படை ஆகிய இரண்டுக்குமே இடந்தந்து சார்பெழுத்துகளைப் பற்றிப் பலவாறாக விரித்துப் பேசியிருக்கிறார்கள். சார்பெழுத்துகளை நன்னூலார் பத்துவகையாகப் பிரித்திருக்கிறார். அவற்றையே அவர் 369 என்று விரித்துப் பேசுகிறார். சார்பெழுத்துகளை மிகக் குறைந்த எண்ணிக்கையில் வகைப்படுத்தியவர் முத்துவீரிய ஆசிரியர். மிகுதியான எண்ணிக்கையில் வகைப்படுத்தியவர் நன்னூலார். முத்துவீரிய ஆசிரியரின் கருத்துப்படி உயிர்மெய் ஆய்தம் ஆகிய இரண்டு மட்டுமே சார்பெழுத்துகளாம். இவர் வரி வடிவ அடிப்படையில் மட்டும் சார்பெழுத்துகளைப் பிரித்திருக்கிறார். தமிழ் நெடுங்கணக்கில் உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு ஆகிய முப்பது போக எஞ்சிய 217 எழுத்துகளையும் (உயிர்மெய் 216, ஆய்தம் 1) முத்துவீரிய ஆசிரியர் சார்பெழுத்தாகக் கொண்டிருக்கிறார். வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் ஆகிய நூல்களில் சார்பெழுத்துகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளைத் தொகுத்து எண்ணிப் பார்த்தால் இவர்கள் எல்லோரும் முழுக்க முழுக்க ஒலி அடிப்படையிலும் புணரியல் அடிப்படையிலும் முத்துவீரியமுடையாரையும் சாராமல் வேறொரு மூன்றாவது நெறியில் நிற்கிறார்கள் என்பது விளங்கும். இவர்கள் தமக்குரிய ஒலியினின்றும் குறுகி ஒலித்த எழுத்துகளையும் நீண்டொலித்து அளபெடுத்த

எழுத்துகளையும் தமக்கெனத் தனி வரி வடிவம் பெற்ற உயிர்மெய் எழுத்துக்களையும் முதலெழுத்துகளோடு அடங்காமல் தனியே நின்று தனக்கெனத் தனி வரிவடிவம் பெற்ற ஆய்த எழுத்தையும் சார்பெழுத்து என்று கொண்டனர். அவற்றை மேலும் வகைப்படுத்தி விரித்துப் பேசும்போது அவை மொழியில் தோன்றும் இடங்களுக்கு ஏற்பவும் அவற்றுக்கு எய்திய வரிவடிவங்களுக்கு ஏற்பவும் அவற்றை வகைப்படுத்திச் செல்லுகின்றனர். கீழ்க்காணும் அட்டவணை இந்த உண்மையை நன்கு தெளிவுபடுத்தும்.

| | | தொல் | வி. சோ. | நேமி | இ.வி. | நன். | தொ. வி. | மு.வ. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | உயிர்மெய் | — | — | 216 | 216 | 216 | 216 | 216 |
| 2. | ஆய்தம் | 1 | — | — | 1 | 8 | 8 | 1 |
| 3. | உயிரளபு | — | 7 | 7 | 7 | 21 | 21 | — |
| 4. | ஒற்றளபு | — | — | 11 | 11 | 42 | 42 | — |
| 5. | குற்றியலிகரம் | 1 | 1 | 1 | 1 | 37 | 37 | — |
| 6. | குற்றியலுகரம் | 1 | 1 | 1 | 1 | 36 | 36 | — |
| 7. | ஐகாரக் குறுக்கம் | — | 1 | 1 | 1 | 3 | 3 | — |
| 8. | ஔகாரக் குறுக்கம் | — | 1 | 1 | 1 | 1 | 1 | — |
| 9. | மகரக் குறுக்கம் | — | — | 1 | 1 | 3 | 3 | — |
| 10. | ஆய்தக் குறுக்கம் | — | — | 1 | — | 2 | 2 | — |

இதுகாறும் கூறியவற்றால் தொல்காப்பியரின் சார்பெழுத்துக் கோட்பாடு ஏனைய இலக்கணப் புலவர்களின் சார்பெழுத்துக் கோட்பாட்டினின்றும் பெரிதும் வேறுபட்ட ஒன்று என்பதும் அது முழுக்க முழுக்க ஒலியியல் அடிப்படையிலும் சந்தி இலக்கண அடிப்படையிலும் அமைந்த ஒன்று என்பதும் புத்தமித்திரனாரின் சார்பெழுத்துக் கோட்பாடு முழுக்க முழுக்க வரிவடிவ அடிப்படையில் அமைந்த ஒன்று என்பதும் வீரசோழியமுடையாரின் சார்பெழுத்துக் கோட்பாடு ஒலியியல் அடிப்படையில் அமைந்த ஒன்று என்பதும் ஏனைய இலக்கணப் புலவர்களின் சார்பெழுத்துக் கோட்பாடுகள் அவ்வளவு தெளிவானவையாக இல்லை என்பதும் இனிது விளங்கும். சார்பெழுத்து பற்றிய தெளிவான கோட்பாடுகள் இல்லாத நேமிநாதம், இலக்கண விளக்கம், நன்னூல், தொன்னூல் விளக்கம் ஆகிய நான்கனுள் நேமிநாதமும் இலக்கண விளக்கமும் சார்பெழுத்துகளை வகுத்தும் விரித்தும் சொல்லும் முறையில் பெரிதும் ஒத்துச் செல்லுகின்றன என்பதும் அவ்வாறே நன்னூலும் தொன்னூல் விளக்கமும் தம்முள் பெரிதும் ஒத்துச் செல்லுகின்றன என்பதும் இங்கே நாம் குறிப்பிடத்தக்கன.

## அடிநிலைக்கிளவிக் கோட்பாடு

இக்கால மொழியியலாரின் உருபனியல் கோட்பாட்டில் மிக இன்றி யமையாத இருவகை ஆய்வுகள் உள்ளன. அவை சேர்க்கை முறை ஆய்வு, விதிமுறை ஆய்வு என்பனவாம். இவற்றைப் பற்றி ஓரளவு தெரிந்து கொண்டால்தான், தமிழிலக்கண அறிஞர்கள் மேற்கொண்ட சொல்லா ராய்ச்சிப் போக்கு நமக்குத் தெளிவாக விளங்கும்.

ஒரு உருபனுக்கு ஒன்றோ பலவோ மாற்றுருபுகள் அமைந்திருக்கும். உருபனியலில் இந்த மாற்றுருபுகளை மொழியியல் ஆய்வாளர் வகைப்படுத்திக் கொடுப்பர். சேர்க்கை முறை ஆய்வின்படி ஒரு மொழி ஆராயப்பட்டால் அதில் மிகுதியான மாற்றுருபுகளைச சுட்டிப் பேசவேண்டி நேரும். இதை ஒரு எடுத்துக்காட்டின் மூலம் விளக்குவோம். கீழ்க்காணும் காட்டுகளைக் கவனித்துப் பாருங்கள்.

நெல் விலை, நெற்பதர், நென்மனி, நெல்லரிசி—மேற்காட்டிய சொற் களில் நெல் என்ற சொல்லுக்கு நெற், நென், நெல், நெல்ல் ஆகிய மாற்றுருபுகள் அமைந்துள்ளன. சேர்க்கை முறை ஆய்வு உருபனியலில் இந்த நான்கு மாற்றுருபுகளையும் சுட்டிப் பேசும். இந்த நான்கு மாற்று ருபுகளையும் வரிசையாகத் தொகுத்து இன்ன மாற்றுருபு இன்ன இடத்தில் தோன்றும என்று தோன்றிடங்களையும் குறிக்கும். தோன்றிடங்கள் என்பதை வருகை இடங்கள் என்றும் குறிக்கலாம்.

மேலே காட்டிய சொற்களையே விதிமுறை ஆய்வின்படி ஆராய்ந்தால் நான்கு மாற்றுருபுகளையும் வரிசையாக எடுத்துக்கூறி அவற்றின் தோன்றி டங்களையும் சுட்டுவதற்குப் பதிலாக அந்த நான்கு மாற்றுருபுகளில் ஒன்றை அடிநிலைக் கிளவியாக எடுத்துக்கொண்டு ஏனைய மாற்றுருபுகளைச் சந்தி விதிகளின் மூலமே வருவித்துக் கொள்ளலாம். அதாவது நெல் என்பதை அடிநிலைக் கிளவியாக எடுத்துக்கொண்டு லகரம் வல்லினத்தின் முன் றகரமாக மாறும் என்றும், மெல்லினத்தின் முன் னகரமாக மாறும் என்றும் தனிக்குறிலை அடுத்து வந்த நிலையில் உயிர் பின் தொடரும்போது ஒற்று இரட்டும் என்றும் ஏனைய இடங்களில் இயல்பாக நிற்கும் என்றும் புணரியலில் சந்தி விதி கூறலாம்.

இப்படி மாற்றுருபுகளை விதிகளின் மூலம் வருவித்துக் காட்டும் விதி முறை ஆய்வுக்கும் மாற்றுருபுகளை வரிசைப்படுத்திக் கொடுத்து அவற்றின் வருகை இடங்களை விளக்குகின்ற சேர்க்கை முறை ஆய்வுக்கும் இடையே உள்ள இன்றியமையாத வேறுபாடுகள்தான் என்ன? விதிமுறை ஆய்வின் படி நிகழ்த்தப்பெற்ற ஆய்வில் சந்தி விதிகளின் எண்ணிக்கை மிகுதியாக இருக்கும். ஆனால் சேர்க்கை முறை ஆய்வின்படி நிகழ்த்தப் பெற்ற ஆய்வில் சந்தி விதிகளின் எண்ணிக்கை குறைவாகவே இருக்கும். சந்தி விதிகளே இல்லாமல் கூட இருக்கும். ஒரு மொழியை ஆராயும் ஆய்வாளன் முழுக்க முழுக்க விதிமுறை ஆய்வைப் பின்பற்றலாம்; அல்லது முழுக்க முழுக்கச் சேர்க்கை முறை ஆய்வைப் பின்பற்றலாம். ஆய்வுச் சூழலுக்கு ஏற்பப் பொருத்தமான வகையில் இரண்டு முறையினையும் கூடப் பின்பற்றலாம்,

நெல் என்ற அடிநிலைக் கிளவியிலிருந்து நென், நெல், நெற், நெல் ஆகிய நான்கு மாற்றுருபுகளையும் விதிகளின் மூலம் வருவிக்கும்பொழுது அந்தச் சொல்லில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள் ஒலியியல் விளக்கங்களுக்கு உட்பட்டனவாக உள்ளன. அதாவது லகரம் வல்லினத்தின் முன் வல்லின றகரமாகத் திரிகிறது என்பதும் அது மெல்லினத்தின் முன் மெல்லின னகரமாகத் திரிகிறது என்பதும் தனிக் குறில் முன் ஒற்று இரட்டியது என்பதும் ஏனைய இடங்களில் இயல்பாக நிற்கிறது என்பதும் ஒலியியல் நோக்கில் ஊன்றிப் பார்க்கும் பொழுது நமக்கு நன்ருக விளங்குகிறது. இந்த மாற்றுருபுகள் ஒலியியல் விளக்கங்களுக்கு உட்பட்டவை. ஆனால் இதே முறையில் நீ என்ற சொல்லிலிருந்து உன் என்ற சொல்லை விதியின் மூலம் வருவிக்கும்பொழுது இந்த மாற்றம் ஒலியியல் விளக்கங்களுக்கு உட்படாததாக இருக்கிறது. மரபு மொழியியலார் இத்தகைய மாற்றுருபுகளை உருபனல் கட்டுண்ட மாற்றுருபு என்றும் ஒலியியல் விளக்கங்களுக்கு உட்பட்ட மாற்றுருபுகளை ஒலியனல் கட்டுண்ட மாற்றுருபுகள் என்றும் கூறுவர். உருபனல் கட்டுண்ட மாற்றுருபுகளை விதிகளின் மூலம் வருவிப்பதைவிட மாற்றுருபுகளாகவே கொண்டு வருகை இடங்களைச் சுட்டுவது நல்லதென்றும் ஒலியனல் கட்டுண்ட மாற்றுருபுகளைச் சந்திவிதிகளின் மூலமே வருவித்துக் கொண்டு உருபனியலில் அந்த மாற்றுருபுகளுக்கு வருகை இடம் கூருமல் விடுவதே முறை என்றும் ஒரு ஆய்வாளன் ஒரு இடைநிலை வழியையும் அமைக்கலாம். இதைத்தான் ஆய்வுச் சூழலுக்கு ஏற்ப ஒரு ஆய்வாளன் பொருத்தமான வகையில் இரண்டு முறையினையும் பின்பற்றலாம் என்று முன்பே குறிப்பிட்டோம்.

எனவே ஒருஆய்வாளன் 1. முழுதாக விதிமுறை ஆய்வைப் பின்பற்றலாம் 2. முழுதாகச் சேர்க்கை முறை ஆய்வைப் பின்பற்றலாம். 3. ஆய்வுச் சூழலுக்கு ஏற்பப் பொருத்தமான வகையில் இரண்டு முறையினையும் பின்பற்றலாம். இவற்றில் சேர்க்கை முறை ஆய்வுக்கு அடிநிலைக் கிளவிக் கோட்பாடு தேவையில்லை. ஆனல் விதிமுறை ஆய்வுக்கும் இதனை உட்படுத்திய மூன்ருவது முறை ஆய்வுக்கும் அடிநிலைக் கிளவிக்கோட்பாடு மிக இன்றியமையாத ஒன்ருகும்.

இலக்கணப்புலவன் அடிநிலைக் கிளவியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வடிவம் தனித்தியங்கும் தன்மை பெற்ற நிறைநிலைச் சொல்லாக இருக்கும் என்பதும் அந்த அடிநிலைக் கிளவி வரலாற்று நோக்கில் கால முதன்மை பெற்றதாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை என்பதும் இங்கே நன்கு நினைவில் கொள்ளத்தக்கது. வேட்கை, வேண் ஆகிய இரண்டு கிளவிகளும் ஒலியாலும் பொருளாலும் தம்முள் தொடர்புடையன என்பது நமக்கு நன்கு தெரியும். இந்த இரண்டு கிளவிகளில் ஒன்றினை அடிநிலைக் கிளவியாகக் கொண்டு ஏனைய கிளவியை விதியின் மூலம் வருவித்துக் கொள்வது விதிமுறை ஆய்வாளர் மேற்கொள்ளும் முறையாகும். மேற்கூறிய கிளவிகளில் வேட்கை என்பதை அடிநிலைக் கிளவியாகக் கொண்டு வேண் என்பதனைத் தொல்காப்பியர் விதியின் மூலமே வருவித்துக் கொள்ளுகிருர் (காண்க தொல். எழுத்து, நூற்பா. 289). வரலாற்று நோக்கில் பார்த்தால் வேள் என்பதோ வேண் என்பதோ

வேர்ச் சொல்லாக இருக்கலாம். ஆனால் அந்தச் சொற்கள் எழுவாயாகவோ பயனிலையாகவோ தனித்தியங்கும் தன்மை பெறாத சொல்லாக இருப்பதால் தொல்காப்பியர் வேண் என்பதை அடிநிலைக் கிளவியாகக் கொள்ளவில்லை. இவ்வாறே பொன், பொலம் ஆகிய கிளவிகளிலும் பொன் என்பதையே அடிநிலைக் கிளவியாகக் கொண்டு தொல்காப்பியப் பெருந்தகை பொலம் என்பதனை விதியின் மூலம் வருவித்திருக்கிறார் (காண்க தொல், எழுத்து, நூற்பா 357). வேட்கை, வேண் ஆகியவற்றில் மிகுதியான எழுத்துகளைக்கொண்ட நீண்ட சொல்லை அடிநிலைக் கிளவியாகக் கொண்டவர் பொன், பொலம் ஆகியவற்றில் குறைந்த எழுத்துகளைக் கொண்ட பொன் என்பதனை அடிநிலைக் கிளவியாகத் தேர்ந்தெடுத்திருப்பது நாம் நன்கு கவனிக்கதக்கது. அடிநிலைக் கிளவியாக ஆய்வாளன் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் போது சில நெறிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். வழக்கில் மிகுதியாகப் பயின்று வருவதாகவும் தானே தனித்தியங்கும் தன்மை பெற்றதாகவும் எளிதில் விதி வகுத்து ஏனைய வடிவங்களை வருவிக்க இடந்தருவதாகவும் உள்ள ஒரு சொல்லை அடிநிலைக் கிளவியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இவ்வாறு தேர்ந்தெடுக்கப் பட்ட ஒன்று வரலாற்று நோக்கில் கால முதன்மை பெற்றதாக இருப்பதும் உண்டு. ஆனால் கால முதன்மை பெற்றதாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை என்பது மீண்டும் நினைவு படுத்தத்தக்கது.

அடிநிலைக் கிளவிக்கோட்பாட்டை நன்கு புரிந்து கொண்டு இந்தக் கோட்பாட்டை நன்கு மனதில் கொண்டு பார்க்கும்போதுதான் தொல்காப்பியப் பெருந்தகையின் எழுத்ததிகாரத்தை நன்கு விளங்கிக் கொள்ள முடிகிறது. தொல்காப்பியர் தமிழிலக்கணத்தில் முழுக்க முழுக்க விதிமுறை ஆய்வையே பின்பற்றியிருக்கிறார். சேர்க்கைமுறை ஆய்வுக்குத் தொல்காப்பியத்தில் சிறிதும் இடமிருப்பதாகத் தெரியவில்லை. இன்றைய மரபுமொழியியலார் கூறும் மாற்றுருபுகள் எல்லாவற்றையும் தொல்காப்பியப் பெருந்தொகை விதிகளின் மூலம் அடிநிலைக் கிளவிகளிலிருந்தே வருவித்திருக்கிறார். விதிமுறை ஆய்வினை அவர் மிகக் கடுமையாகவும் திட்டவட்டமாகவும் பின்பற்றியதால்தான் தொண்ணூறு என்பதில் தொண் என்பதனை ஒன்பது என்ற அடிநிலைக் கிளவியிலிருந்தும் அதிலுள்ள நூறு என்ற கிளவியைப் பத்து என்ற அடிநிலைக் கிளவியிலிருந்தும் வருவித்துக் காட்டுகிறார் (காண்க தொல், எழுத்து, நூற்பா. 446).

உள்பொருள் காண்பதில் காணும் உள் என்ற கிளவியை உண்டு என்ற அடிநிலைக் கிளவியிலிருந்து வருவித்திருப்பதையும் இல்லாப் பொருள் என்பதில் உள்ள இல்லா என்னும் கிளவியை இல் என்னும் அடிநிலைக் கிளவியிலிருந்து வருவித்திருப்பதையும் இங்கே நாம் மேலும் சற்று விரிவாக ஆராய்வது பொருந்தும். உண்டு, உள் என்பவற்றில் உண்டு என்பதை அடிநிலைக் கிளவியாகக் கொண்டவர் இல்லை, இல்லா, இல் என்பவற்றில் இல் என்பதை அடிநிலைக் கிளவியாகத் தேர்ந்து கொண்ணக் காரணம் என்ன? இல் என்பது இக்கால வழக்கில் பெயருக்கு அடையாக மட்டுமே வரக் காண்கிறோம். அக்காலத்தில் இதுதானே தனித்

இயங்கும் தன்மை பெற்ற முற்றாக வழங்கியிருந்தாலன்றி இதனை அடி நிலைக் கிளவி என்று கொள்ளுவது பொருந்தாது. இந்த நோக்கில் இல் என்ற சொல்லின் ஆட்சியைப் பார்க்குங்கால் அது முற்றாகவும் பயன் படுத்தப்பட்டிருப்பதைக் காண்கிறோம். கீழ்க்காணும் திருக்குறள்களை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.
தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

அடிநிலைக் கிளவிக் கோட்பாட்டின்படித் தொல்காப்பியர் இல் என்பதனையும் உண்டு என்பதனையும் அடிநிலைக்கிளவிகளாகக் கொண்டதில் எவ்வித முரண்பாடும் இல்லை என்பது இப்போது தெளிவாகும்.

கீழென் கிளவி யுறழத் தோன்றும்
(தொல். எழுத்து 396)

இதற்கு உரை கூறவந்த இளம்பூரணர் "கீழ் எனும் சொல் உறழ்ச்சி யாகத் தோன்றி முடியும்" என்று கூறிச் செல்லுகிறார். கீழ்குளம், கீழ்க்குளம் என எடுத்துக்காட்டுகளைத் தந்திருக்கிறார். "தோன்றும் என்றதனால் நெடுமுதல் குறுகாது உகரம் வருதலும் கொள்க" என்று ஒரு மிகை விளக்கமும் சொல்லியுள்ளார். குறுகாது உகரம் வருதலும் என்பதற்குப் பதிலாக குறுகலும் உகரம் வருதலும் என்று ஒரு சுவடியில் பாட வேறுபாடும் இருப்பதாகத் தெரிகிறது. இந்த நூற்பாவுக்குரிய உரையையும் காட்டுகளையும் விளக்கத்தையும் பாட வேறுபாட்டையும் ஒருங்கு வைத்து எண்ணிப் பார்த்தால் கீழ் என்பது கிழக்குத் திசையைக் குறித்ததாகவே உரையாசிரியர் கொண்டிருக்கிறார் என முடிவு செய்ய வேண்டியுள்ளது. குறுகலும் உகரம் வருதலும் என்ற பாட வேறுபாடு உரையாசிரியர்க்குப் பின்வந்த இலக்கணப் புலவர்கள் மனத்திலும் கீழ் என்பது திசையைக் குறித்த சொல் என்ற எண்ணம் இருந்திருக்கிறது என்பதை வலியுறுத்துகிறது. எழுத்ததிகாரம் முழுமையும் நன்கு ஆராய்ந்து பார்க்கின்றபொழுது, இந்த நூற்பாவில் கண்ட கீழ் எனும் கிளவி திசையைக் குறித்த சொல் அல்ல என்பது உறுதிப்படுகிறது.

கிழக்கு, கீழ், மேற்கு, மேல் ஆகிய கிளவிகளுக்குத் தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் எங்கும் விதியமைக்கவில்லை. ஆனால் வடக்கு, வட; தெற்கு, தென் ஆகிய கிளவிகளுக்குத் தெளிவாக விதி வகுத்துச் செல்லுகிறார் (தொல், எழுத்து 433), இங்கே எழுந்துள்ள சிக்கலைத் தீர்ப்பதற்குத் தமிழில் காணும் குடக்கு, குணக்கு ஆகிய கிளவிகள் நமக்கு இப்போது பெருந்துணை புரிகின்றன. திசைப்பெயர்களுக்காகத் தொல் காப்பியர் கூறிய விதி வடக்கு, தெற்கு, குடக்கு, குணக்கு ஆகியவற்றுக்கே பொருந்தும். கிழக்கு, மேற்கு ஆகியவற்றுக்கு அவர் எங்கும் விதி கூறவு மில்லை; அவர் காலத்தில் இந்தச் சொற்கள் வழக்கில் இருந்ததாகத்

தெரியவுமில்லை. ஆகவே கீழென் கிளவியுறழத்தோன்றும் என்ற நூற்பாவில் காணும் கீழ் எனும் சொல் திசையைக் குறித்ததாக இருக்கமுடியாது. அன்றியும் அடிநிலைக் கிளவிக் கோட்பாட்டின்படிக் கிழக்கிற்குக் கீழ் என்பது அடிநிலைக் கிளவி ஆகாது. எனவே கீழ் என்பது தாழ்வு, தாழ்ச்சி என்ற பொருளைக் குறித்த சொல்லாகவே இருக்க வேண்டும். இந்த விளக்கங்களை மனங்கொண்டு பார்க்கும்பொழுது, "கீழென் கிளவி யுறழத் தோன்றும்" என்ற நூற்பாவுக்கு வேறு உரையும், வேறு காட்டுகளும், வேறு விளக்கங்களும் வேண்டும் என்பது உறுதியாகிறது.

திசைப்பெயர் பற்றிய முடிவுகளைக் கூறும் நூற்பாவுக்கு உரை எழுதும்போது உளங்கூர் கேள்வி இளம்பூரணரே கிழக்கு, மேற்கு ஆகிய கிளவிகளை எடுத்துக்காட்டாகத் தந்திருப்பதைக் காண்கிறோம். தொல்காப்பியப் பெருந்தகையின் அடிநிலைக் கிளவிக் கோட்பாட்டை நன்கு விளங்கிக் கொள்ளாமையால்தான் நாம் போற்றி மதித்து வணங்கத்தக்க உரையாசிரியர் உரையிலும் இந்தப் பிழை நேர்ந்திருக்கிறது.

அகம் கை என்பதிலிருந்து அங்கை என்பதை வருவித்திருக்கிறார். ஒன்று என்பதிலிருந்து ஒரு, ஓர் என்பவற்றையும், இரண்டு என்பதிலிருந்து இரு, ஈர் என்பவற்றையும் வருவித்திருக்கிறார். தன், என், நின் முதலாய வடிவங்களை முறையே தான், யான், நீ முதலாய வடிவங்களிலிருந்து விதிகளின் மூலம் வருவித்துக் காட்டுகிறார். இவை எல்லாவற்றையும் ஒருங்கு வைத்து நோக்கும் போது தொல்காப்பியப் பெருந்தகையின் இலக்கணக் கோட்பாட்டில் அடிநிலைக் கிளவிக்கோட்பாட்டிற்கு இருந்த இன்றியமையாமை இனிது விளங்கும்.

நீயிர், நும் ஆகிய கிளவிகளில் தொல்காப்பியர் நும் என்பதை அடிநிலைக் கிளவியாகத் தேர்ந்து கொண்டு நீயிர் என்பதனை விதிகளின் மூலம் வருவித்திருக்கிறார் (தொல், எழுத்து 327). ஏனைய இடப்பெயர்களில் அவர் மேற்கொண்ட முறையிலிருந்து இது முற்றும் மாறுபட்ட ஒன்றாகத் தெரிகிறது. தன் என்பதைத் தான் என்பதிலிருந்து வருவித்தவர் நும் என்பதையும் நீயிர் என்பதிலிருந்து வருவித்திருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறோம். ஆனால் அவர் நும் என்பதிலிருந்து நீயிர் என்பதனை வருவித்திருப்பதன் காரணம் நமக்கு இப்போது விளங்கவில்லை.

எல்லார் தம்மையும், எல்லீர் நும்மையும், எல்லா நம்மையும் ஆகிய கிளவிகளுக்கு இவர் விதி கூறியிருப்பதை நன்கு ஆராய்ந்து பார்த்தால் (தொல். எழுத்து 190, 191, 192) தொல்காப்பியர் யாத்திருப்பது முழுக்க முழுக்க வண்ணனை இலக்கணக் கோட்பாட்டைப் பின்பற்றிய ஒரு இலக்கணம் என்பதும் அதிலும் இவர் விதிமுறை ஆய்வை முழுமையாகப் பின்பற்றியவர் என்பதும் இனிது விளங்கும்.

## சொற்பிரிப்புக் கோட்பாடு

விகுதிகளை ஏற்றும் ஏற்காமலும் வரும் அடிச்சொற்களை எல்லாம் பொதுவாகச் சொல்லென்று பிரிப்போம். ஒன்றுக்கு மேற்பட்ட அடிச்சொற்கள் சேர்ந்து ஒரு சொல் போல நடப்பின் அதனைக் கூட்டுச்சொல்

அல்லது தொகைச் சொல் என்று சுட்டுவோம். கல், நெல் முதலாயினவும் கல்லை, கல்லைத்தான், நெல்லை, நெல்லைத்தான் முதலாயினவும் சொற்களுக்கு எடுத்துக் காட்டுகளாம். செங்கல், செந்தாமரை என்பன ஒரு சொல் போல நடக்கும் தொகைச் சொற்கள். கண்டுபிடி, கற்றுக்கொள், உருவாகு, உண்டாகு முதலாய சொற்கள் கூட்டுச் சொற்களுக்கு எடுத்துக் காட்டுகளாம். இலக்கணப் புலவர்கள் சொல்லையும் தொடரையும் ஆராய்ந்து இலக்கணம் கூறும்பொழுது சொற்களைப் பிரித்தறிய வேண்டியுள்ளது. அப்படிச் சொற்களைப் பிரிக்கும்பொழுது இலக்கணப் புலவர்கள் சில அடிப்படை நெறிமுறைகளைப் பின்பற்றி வந்திருக்கிறார்கள் என்றே கருத வேண்டியுள்ளது. அந்த அடிப்படை நெறிமுறைகளைப் பற்றி எண்ணிப் பார்த்து ஓரளவாவது நாம் புரிந்து கொண்டால்தான் சொற்பிரிப்பு முறையில் இன்று நாம் காணும் பல பூசல்கள் குறையும்.

இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சொற்களை எடுத்துக் கொண்டு ஒப்பிட்டு ஆராயும்பொழுதுதான் ஒரு சொல் பிரிக்கத் தக்கதா இல்லையா என்பது விளங்கும். அப்படி ஒப்பிட்டு ஆராயும்பொழுது ஒப்பிடப் படுகின்ற இரண்டு சொற்களிலும் உருவாலும் பொருளாலும் ஒரு பகுதி ஒத்து நிற்குமானால் ஒத்து நிற்கும் பகுதியை ஏனைய பகுதியிலிருந்து பிரிக்கலாம். கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகள் இந்தக் கருத்தை மேலும் தெளிவுபடுத்தும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பால் | 4. | ஊரில் |
| 2. | பாலை | 5. | காலை |
| 3. | ஊர் | 6. | காலில் |

மேற்காட்டிய எடுத்துக்காட்டுகளில் உருவாலும், பொருளாலும், ஒத்து நிற்கும் பகுதிகளைப் பாருங்கள். பால், பாலை என வரும் இணைகளில் பால் என்ற பகுதி உருவாலும் பொருளாலும் ஒத்து நிற்றல் காண்க. எனவே பாலை என்பதனைப் பால்-ஐ என்று பிரிக்கலாம் என்பது தெளிவாகிறது. இவ்வாறே ஊர், ஊரில் எனவரும் இணைகளில் ஊர் என்பது உருவாலும் பொருளாலும் ஒத்து நிற்றல் காண்க.

அதாவது ஊர் என்ற சொல்லும் ஊரில் என்பதில் ஒரு பகுதியாக நிற்கும் ஊர் என்ற சொல்லும் ஒன்றே என்று உணரப்பட்ட நிலையில்தான் ஊரில் என்பதனை ஊர்-இல் என்று பிரிக்கலாம். பொருளால் ஒத்து நில்லாத சொற்பகுதிகளைப் பிரிப்பது வரலாற்று நோக்கில் சில சூழல்களில் சரி என்று கூட நிறுவப்படலாம். ஆனால் வண்ணனை நோக்கில் பொருளால் ஒத்து நில்லாத சொற்பகுதிகளைப் பிரிப்பது சற்றும் பொருந்தாது. இந்த உண்மையை மனதில் கொண்டுதான் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் ஒன்பது என்ற சொல்லை ஒன்-பது என்று பிரிக்காமல் விட்டிருக்கிறார். சொற்பிரிப்பு முறையைப் பற்றி ஆழமாக ஆராயும்போது வரலாற்று இலக்கணக் கோட்பாடு பற்றியும் வண்ணனை இலக்கணக் கோட்பாடு பற்றியும் ஓரளவு நாம் தெரிந்து கொள்வது இன்றியமையாததாகிறது.

வரலாற்று நோக்கில் மரக்கால் என்ற சொல்லை ஆராய்ந்து பார்த்தால் நாம் அதனை மரம்-கால் என்று பிரிக்க இயலும். மிகப் பழங்காலத்தில் மரக்கால் என்ற பெயரில் வழங்கப்பட்ட அளவு கருவி மரத்தால் மட்டுமே செய்யப்பட்டதாக இருந்தது. அண்மைக்காலம் வரையில்கூட மரத்தால் செய்யப்பட்ட மரக்கால் புழக்கத்தில் இருந்தது நமக்குத் தெரியும். பிற்காலத்தில் இரும்பால் செய்யப்பட்ட அளவு கருவியைக் கூட மரக்கால் என்றே வழங்கினர். மேலும் மரக்காலை வேறு பிரித்துச் சுட்டும் நோக்கத்தால் இருப்பு மரக்கால், மா மரக்கால் என இருப்பு, மர முதலாய அடைகளையும் சேர்த்தனர். இந்த அடைகளை மரக்கால் என்ற சொல் ஏற்றுக் கொண்ட கால கட்டத்தில் மரக்கால் என்ற சொல் பிரிக்க இடம் தாரததாய் ஒரு சொல் நீர்மை பெற்றதாய் மாறிவிட்டது என்பதுதான் இங்கு நன்கு உணர வேண்டிய செய்தி. வண்ணனை இலக்கணப்போக்கில் இன்று மரக்கால் என்ற சொல்லைப் பிரிப்பது பொருத்தமில்லை. இதே கருத்தை இன்னொரு எடுத்துக்காட்டின் மூலமும் இங்கே விளக்குவது நல்லது. தண்ணீர் என்ற சொல்லை வரலாற்று நோக்கில் தண்மை-நீர் என்று பிரிக்கலாம்.

ஆனால் இன்றைய வழக்கில் அது ஒரு சொல் நீர்மைத்தாக மாறி விட்டதோடு பச்சை, சுடு முதலாய அடைகளையும் ஏற்றுப் பச்சைத் தண்ணீர், சுடு தண்ணீர் என்றெல்லாம் ஆட்சி பெறத் தொடங்கி விட்டது. மேலும் நீர் என்ற சொல் தன்னியல்பில் தனித்து நின்று இக்காலத்தில் மொழியில் பயின்று வருவதில்லை. ஆகவே வண்ணனை இலக்கண நோக்கில் தண்ணீர் என்ற சொல்லைப் பிரிப்பது பொருந்தாது.

குயில், மயில், வெயில், துயில் முதலாய சொற்களை ஒப்பு நோக்கிப் பார்க்கும்பொழுது இறுதியில் உள்ள இல் என்பது பிரிக்கத்தக்க ஒரு விகுதியோ என்று எண்ணத் தோன்றும். இல் என்பதை விகுதி என்றே கொண்டு பிரித்து விட்டால் எஞ்சியுள்ள பகுதிகள் ஏதாவது பொருள் உணர்த்துமா என்றும் பார்க்கவேண்டும். அவை எத்தகைய பொருளையும் உணர்த்த இயலாது எனின் இல் என்பதனை விகுதி என்று பிரிப்பது பொருந்தாது. மேற்கூறிய சொற்களைப் பிரித்துப் பார்த்தால் உள்ள படியே எஞ்சியுள்ள பகுதிகள் எந்தவிதமான பொருளையும் உணர்த்துவதாகத் தெரியவில்லை. இந்தச் சொற்களே வரலாற்று நோக்கில் ஆராயப் படும்போது ஒருகால் மேலே சுட்டியபடி பிரிப்பதற்கு இடந்தரவும் கூடும். ஆனால் இன்றைய நிலையில் வண்ணனை நோக்கில் மேற்கூறிய சொற்களில் உள்ள இல் என்பதை விகுதியாகக் கருதிப் பிரிப்பது பொருந்தாது.

அனல், தணல், புனல், குழல், உடல் முதலாய சொற்களில் இறுதியில் காணும் அல் என்பது விகுதி போலத் தோன்றினும் வண்ணனை இலக்கண நோக்கில் அதை விகுதி என்று நிறுவ இயலாது. வரலாற்று நோக்கில் இச்சொற்கள் ஒருகால் பிரிப்பதற்கு இடந்தரக்கூடும். அதைப் பற்றியும் திட்டவட்டமாக இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை.

இலக்கண நோக்கில் சொற்களைப் பிரிக்கும்போது வரலாற்று ஆய்வின் அடிப்படைகளையும் வண்ணனை ஆய்வின் அடிப்படைகளையும் ஆய்வாளன் நன்கு புரிந்து கொண்டிருக்க வேண்டும் என்பதும் சொல்லமைப்பையும் மொழியமைப்பையும் அவன் உணர்ந்திருக்க வேண்டும் என்பதும் இங்கே நன்கு வற்புறுத்திக் குறிப்பிடத்தக்க செய்திகளாகும்.

## பகுதிப் பொருள் விகுதி

குன்று, குன்றம், மன்று, மன்றம், நோக்கு, நோக்கம் முதலிய சொற்களில் அம் என்ற விகுதி தனிப்பட்ட முறையில் ஏதும் பொருள் வேறுபாட்டை உணர்த்துவதாகத் தெரியவில்லை. அதாவது மன்று, மன்றம் என்பன ஒரு பொருட்கிளவிகள், அவ்வாறே குன்று, குன்றம் என்பனவும் ஒரு பொருட்கிளவிகள். இத்தகைய சூழலில் விகுதி போலத் தோன்றும் அம் என்ற கிளவியைப் பிரிப்பது பொருந்துமா என்ற வினு எழலாம். அம் விகுதி இந்தச் சொற்களில் தனிப்பட்ட முறையில் தான் ஏதும் பொருள் உணர்த்தவில்லை. எனினும் ஆட்டம், ஓட்டம், நாட்டம் முதலிய சொற்களில் அம் என்பது பெயராக்க விகுதியாகச் செயற்படுகிறது. எனவே அம் என்பதைப் பிரிப்பதில் தவறில்லை. ஆனல் மன்று, மன்றம் எனவரும் சொற்களில் அம் என்பது பெயராக்க விகுதியாகச் செயற்படவில்லை என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். இங்கே எழுந்துள்ள இந்தச் சிக்கலை நன்கு எண்ணிப்பார்த்த நமது இலக்கணப் புலவர்கள் குன்று, குன்றம் முதலாய சொற்களில் காணும் அம் விகுதியைப் பகுதிப் பொருள் விகுதி என்று சுட்டினர். தனக்கென்று தனிப்பொருளில்லாது பகுதியின் பொருளையே தன் பொருளாகக் கொண்டு வரும் விகுதியைப் பகுதிப் பொருள் விகுதி என்று சுட்டியது சாலப் பொருந்தும்.

**சாரியை:** குயில், மயில் முதலாய சொற்களில் காணும் ஈறுகள் பிரிக்கத்தக்க விகுதிகள் போலத் தோன்றினும் பிரிக்க இடந்தராதன என்று பார்த்தோம். குன்றம், மன்றம் முதலான சொற்களில் காணும் அம் ஈறு பிரிக்கத்தக்க விகுதியாக அமைந்திருப்பதற்கு உரிய காரணத்தையும் அவ்விகுதிக்கு நமது மரபிலக்கணங்கள் பகுதிப்பொருள் விகுதி எனப் பெயரிட்டிருக்கும் சிறப்பையும் மேலே விளக்கமாகப் பார்த்தோம். வேறு சில சூழல்களில் ஒரு சொல்லின் இடையில் நிற்கும் ஒரு கூறு பகுதியோடு சேர்க்கத் தக்கதா அல்லது விகுதியோடு சேர்க்கத் தக்கதா அல்லது இரண்டோடும் சேராமல் இடையில் தனியே நிற்கத் தக்கதா என்று ஐயம் எழும் நிலையும் உண்டு. கீழ்க்காணும் சொற்களை ஆராய்ந்து பாருங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பால் | 4. | ஊர் |
| 2. | பாலை | 5. | ஊரை |
| 3. | பாலினை | 6. | ஊரினை |

மேற்காட்டிய சொற்களில் பாலினை, ஊரினை என்பவை மட்டும் பிரிப்பதில் சிக்கல் விளைக்கும் சொற்களாம். பாலினை என்பதனைப் பால்-இனை என்றோ பாலின்-ஐ என்றோ பால்-இன்-ஐ என்றோ இந்த மூன்று முறைகளில் ஏதாவது ஒரு முறையில் பிரிக்க வாய்ப்புண்டு.

இந்த மூன்று முறைகளில் எளிமைக்கும் சிக்கனத்துக்கும் உதவுகின்ற முறை எதுவென்று முடிவு செய்தல் வேண்டும்.

பால்-இனை என்று பிரித்தால் இரண்டாம் வேற்றுமை உருபில் இனை என்பதை ஐ என்பதன் மாற்றுருபாகச் சேர்க்க வேண்டும். பாலின்-ஐ என்று பிரித்தால் பாலின் என்பதனைப் பால் என்பதன் மாற்றுருபாகக் கொள்ள வேண்டும். இந்த இரு பிரிப்பிலுமே சிக்கனக் கொள்கை புறக் கணிக்கப்படுகின்றது. பால்-இன்-ஐ என்று பிரித்தால் இன் என்பது ஒரு தனிக் கூறாகப் பிரிந்து நிற்கும். இரண்டு சொற்களை இயைத்து நிற்பதைத் தவிர இச்சொல்லுக்கு வேறு பணி ஒன்றும் இல்லை. இப்படிப் பொருள் நோக்கில் இரண்டு சொற்களைச் சேர்ப்பதற்கு மட்டும் பயன்படுவதாக அங்கே சார்ந்து இயைத்து நிற்கும் கிளவிகளைத் தமிழிலக்கணங்கள் பிரித்துத் தொகுத்து வகைப்படுத்திச் சாரியை என்று பெயரும் கொடுத்திருக்கின்றன. சொற்பிரிப்பு முறையில் எழும் சிக்கல்கள் சிலவற்றை மிக நல்ல முறையில் தீர்ப்பதற்குச் சாரியைக் கோட்பாடு பயன்படுகிறது என்பது இங்கே நாம் மிக மகிழ்ச்சியோடு குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

தமிழிலக்கணக் கோட்பாட்டின்படி இரண்டு சொற்கள் பொருள் நோக்கில் சேரும்பொது சாரியைக் கிளவிகள் அங்கே வந்து தோன்றும் என்று கொள்ளப்படுமேயன்றி முன்பே அங்கு அமைந்து கிடந்தன என்று கொள்ளப்படுவதில்லை. கை-ஆல் என இரண்டு கிளவிகள் ஒன்று சேரும் பொழுது அவற்றிடையே இன் சாரியை தோன்றலாம், அல்லது தோன்றா மலும் இருக்கலாம். இன் சாரியை தோன்றுமாயின் கை-ஆல் என்பது 'கையினால்' என்று மாறும்; தோன்றாமல் போகுமாயின் 'கையால்' என்று அமையும்.

சொற்பிரிப்பு முறையைப் பொறுத்தவரையில் தமிழிலக்கணப் புலவர்கள் திட்டவட்டமாகச் சில முறைகளைப் பின்பற்றினர் என்பது இப் போது விளங்கியிருக்கும். மேலும் வரலாற்று நோக்கில் சொற்களைப் பிரிப் பதற்கும் வண்ணனை நோக்கில் சொற்களைப் பிரிப்பதற்கும் சில இன்றி யமையாத வேறுபாடுகள் உண்டு. வரலாற்று நோக்கில் பிரிக்கத் தக்கதாக அமைந்த ஒரு சொல வண்ணனை நோக்கில் பிரிக்க இடந்தராததாக அமைவதும் உண்டு. வரலாற்று நோக்கில் ஒரு சொல்லைப் பிரிக்கும் பொழுது அதில் கிடைத்த உருபன்களின் வடிவமும் வண்ணனை நோக்கில் கிடைத்த வடிவமும் வேறு வேறாகத் திகழ்வதும் உண்டு. வான், பான், ஈற்று வினையெச்சங்களை வரலாற்று நோக்கில் ஆராய்ந்தால் அவற்றையே ஆன் ஈறாகப் பிரிக்க நேரலாம். கொடுக்குவர் என்ற வினைமுற்றையும் கொடுக்கின் கொடுக்க முதலாய வினையெச்சங்களையும் ஒப்பிட்டு அமைதி யாக வன்றி நோக்கினால் கொடுக்கு என்பதை ஒரு வினையடியாகக் கொள்ளவும் இடமேற்படும். வரலாற்று நோக்கில் பார்த்தால் இந்த எண்ணம் மேலும் வலுப்படும். நம்முடைய மரபிலக்கணங்கள் யாவும் பெரும் பாலும் வண்ணனை நோக்கில் அமைந்தன என்றே கருத வேண்டியுள்ளது

தமிழிலக்கணப் புலவர்கள் வண்ணனை நோக்கில் திட்டவட்டமான சில கோட்பாடுகளுடன் முறையாகச் சொற்களைப் பிரித்து உருபன்களை வகைப்படுத்தி ஒரு தொடரில் உள்ள பல்வேறு சொற்களுக்கு இடையே உள்ள தொடர்புகளை விளக்கி இலக்கணங்களை அமைத்திருக்கிறார்கள் என்ற உண்மை மொழியியல் நோக்கோடு இலக்கணங்களை ஆராயும்போது நமக்கு நன்கு புலனாகின்றது.

## சாரியைக் கோட்பாடு

சொற்களையும் தொடர்களையும் இலக்கண நோக்கில் விரித்து ஆராயும் பொழுது ஒரு சில சூழல்களில் சில இடர்ப்பாடுகள் நேர்வதையும் நாம் காண்கிறோம். பலவற்றை, பலவற்றால், சிலவற்றை, சிலவற்றால், எழுது கோலை, எழுதுகோலால் முதலாய சொற்களில் ஐ, ஆல் ஆகிய வேற்றுமை உருபுகளைக் காண்கிறோம். பலவற்றை பலவற்றால் என வரும் சொற்களில் பல என்ற அடிச்சொல்லுக்கும் ஐ, ஆல் முதலாய வேற்றுமை உருபுகளுக்கும் இடையில் அற்று என நிற்கும் ஒரு சொற்கூறினையும் பார்க்கிறோம். இது பகுதியோடு சேர்க்கத்தக்கதாகவும் இல்லை; விகுதியோடு சேர்க்கத்தக்க தாகவும் இல்லை. ஆனால் பகுதியையும் வேற்றுமை விகுதியையும் சேர்க்க இது இன்றியமையாததாக உள்ளது. இப்படிப்பட்ட சொற்கூறுகளைத் தான் நம்முடைய மரபிலக்கணங்கள் சாரியை என்று குறிக்கின்றன.

இரண்டு சொற்கள் சேரும்போது சாரியை அங்கே தோன்றும் என்பதே தமிழிலக்கணக் கொள்கை. சாரியை முன்பே அங்கு அமைந்து கிடந்ததாகத் தமிழிலக்கணங்கள் கொள்ளாது. அதாவது மரம்-ஐ என்பது மாம்-அத்து-ஐ என்றாகிப் பிறகு மரத்தை என்றாகும். இந்தச் சாரியை களில் கட்டாயமாக அமைய வேண்டிய சாரியைகள் என்று சில உண்டு. காட்டாக மரம்-ஐ என்பதில் அத்துச் சாரியை கட்டாயமாக வரவேண்டும். இக்கால இலக்கியத் தமிழில் அம் ஈற்றுப் பெயர்கள் வேற்றுமை ஏற்கும் பொழுது பெறும் அத்துச் சாரியையைக் கட்டாயச் சாரியை என்று குறிக்கலாம். வேறு சில சாரியைகள் இரண்டு சொற்களின் இடையில் வரலாம், அல்லது வாராமலும் போகலாம். இப்படிப்பட்ட சாரியைகளை விருப்பச் சாரியை என்று குறிக்கலாம். ஊர்-ஐ என்பது ஊரினை என இன் பெற்றும் வரும்; ஊரை என இன் பெறாமலும் வரும். அவ்வாறே நூல்-ஐ என்பது நூலினை என இன் பெற்றும் வரும்; நூலை என இன் பெறாமலும் வரும்.

சாரியைகளுக்குத் தமக்கென்று தனிப்பட்ட பொருள் ஒன்றும் இல்லை. வரலாற்று நோக்கில் பார்த்தால் ஒரு சில சாரியைகளுக்குச் சில புதிய விளக்கங்கள் கூறிப் பொருள் கூறவும் வாய்ப்பு ஏற்படலாம். ஆனால் வண்ணனை நோக்கில் பார்க்கும்போது சாரியைகளுக்கு அகராதிப் பொரு ளோ இலக்கணப் பொருளோ உண்டு என்று கூற வாய்ப்பில்லை. சாரியைகளுக்குப் பொருள் இல்லை என்றாலும் இவை மொழியில் இன்ன இடத்தில் இன்ன முறையில் தோன்றும் என்று வரையறுத்துத் தோன் றிடம் கூற முடியும். பெயரில் வருகின்ற சாரியைகள் பெயருக்கும்

வேற்றுமை உருபுக்கும் இடையில் வரும். ஊரினை என்பதில் இன் என்ற சாரியை அவ்வாறு வந்தமை காண்க. வினைகளில் வரும் சாரியைகள் கால இடைநிலைக்கும் பாலிட விகுதிக்கும் இடையில் வரும். நடந்தனன் என்பதில் அன் என்ற சாரியை கால இடைநிலைக்கும் பாலிட விகுதிக்கும் இடையில் வந்தமை காண்க. ஊரினன், நாட்டினன் முதலாய சொற்களில் இன் என்ற சாரியை பெயர்ப் பகுதிக்கும் பாலிட விகுதிக்கும் இடையில் வந்தமை காண்க.

புணர்ச்சி இலக்கணம் கூறும்போது தொல்காப்பியர் சாரியைகளை வரிசைப்படுத்தி எடுத்துக் கூறுகிறார். அப்போது வினைகளில் தோன்றும் சாரியைகளைக் கருத்தில் கொண்டதாக நினைக்க இடமில்லை. ஆகவே தொல்காப்பியர் கருத்துப்படிப் பெயருக்கும் வேற்றுமை விகுதிக்கும் இடையில் வரும் கிளவிகள் மட்டுமே சாரியை என்று கொள்ளப்படும்.

நாய்-குட்டி என்பது நாய்க்குட்டி என மாறும்போது வருமொழிக்குரிய ககர ஒற்று மிகுந்தது. இதனை நாம் ஒற்று மிகுதல் என்கிறோம். கல்-ஐ என்பது கல்லை என்று மாறும்போது அங்கே நிலைமொழிக்குரிய லகர ஒற்று இரட்டித்தது. இதனை நாம் ஒற்றிரட்டல் என்கிறோம். மணி-ஐ என்பது மணியை என்று மாறும்போது அங்கே யகர உடம்படுமெய் தோன்றியது. இதை நாம் உடம்படுமெய் தோன்றல் என்கிறோம். இந்த மூன்று இடங்களிலுமே சந்தியின் காரணமாக ஒரு எழுத்து புதியதாக வந்து தோன்றியதைக் காணலாம். இருப்பினும் எழுத்துகள் தோன்றிய முறையை ஒட்டி மூன்றும் வேறு வேறாக உணரப்பட்டன. நாய்க்குட்டி என்பதில் வருமொழியில் உள்ள ககர ஒற்று இரட்டித்தது. கல்லை என்பதில் நிலைமொழியிலுள்ள லகர ஒற்று இரட்டித்தது. மணியை என்பதில் இரண்டு உயிருக்கும் இசைவான ஒரு உடம்படுமெய் தோன்றியது. ஆகவே புதிய ஒரு எழுத்து தோன்றியது என்ற முறையில் மூன்றிலும் ஒற்றுமை இருந்தாலும் கூட எந்த எழுத்து தோன்றியுள்ளது என்பதிலும் எந்த முறையில் தோன்றியுள்ளது என்பதிலும் இவற்றிடையே வேறுபாடுகள் உள்ளன. இங்கே காட்டிய எடுத்துக்காட்டுகளில் ஒரு எழுத்து எப்படித் தோன்றியதோ அதைப் போலத்தான் சாரியைகளும் தோன்றுகின்றன எனத் தொல்காப்பியரைப் போன்ற வண்ணனை இலக்கணப் புலவர்கள் கருதுகின்றனர்.

தமக்கென்று தனிப்பட்ட பொருள் இல்லாதனவாகவும் தமக்கென்று வரையறுக்கப்பட்ட தோன்றிடங்கள் உள்ளனவாகவும் பகுதியோடு சேர்த்துப் பகுதியாகவோ விகுதியோடு சேர்த்து விகுதியாகவோ கொள்ள இடந்தராதனவாகவும் அமைந்துள்ள சொற்களுக்குத் தமிழிலக்கணப் புலவர்கள் சாரியை என்று பெயர் கொடுத்தது மிகவும் பொருத்தம். இத்தகைய இயல்பு பெற்ற சாரியைகள் எந்த மொழியிலும் மிகச் சிலவாகவே இருக்கும். அத்தகைய சாரியைகளையெல்லாம் புணர்ச்சி இலக்கணம் கூறும் பகுதியில் தொகுத்துக் கூறி அவற்றின் தோன்றிடங்கள் முதலாயவற்றையும் தமிழிலக்கணங்கள் விளக்கிக் கூறும்.

நன்னூலார் கருத்தின்படிச் சாரியைகள் வினைகளிலும் வரலாம் என்பதைத் முன்பே பார்த்தோம். பெயரிலும் வினையிலும் வருகின்ற சாரியைகளைத் தவிர உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துகளையும் சுட்டிப் பேசும்போது பயன்படும் சிலஇளவிகளையும் நமது மரபிலக்கணங்கள் சாரியை என்றே குறிக்கின்றன. கரம், காரம், கான் அகரம் முதலாய சிளவிகளை எழுத்துச் சாரியை என்று வழங்குதல் காண்க. எ-டு.

| சாரியை பெறாது வந்தன | சாரியை பெற்று வந்தன |
|---|---|
| ம் | மகரம், ம∴கான் |
| அ | அகரம் அல்லது அகாரம் |
| ஆ | ஆகாரம் |
| ஐ | ஐகாரம் அல்லது ஐகான் |

செய்குவன், வருகுவன் முதலாய வினைகளில் உள்ள குகரத்தையும் வருக்கு, பேருக்கு, முதலாயவற்றில் வரும் உகரத்தையும் நன்னூலார் சாரியை என்று கருதுகிறார். தொல்காப்பிய நெறியில் இவற்றையும் சாரியை என்றே குறிக்கின்றார்.[23]

எல்லாம் என்னும் சொல்லும் எல்லாரும் என்னும் சொல்லும் வேற்றுமை ஏற்கும்போது எய்தும் மாற்றங்களைப் பற்றித் தொல்காப்பியர் உருபியலில் பேசுகின்றார் (காண்க: தொல். எழுத்து 190, 191, 192). எல்லாம் என்ற சொல் இரண்டாம் வேற்றுமை ஏற்கும்போது எல்லா வற்று ஐ உம் என அமைந்து எல்லாவற்றையும் என வரும். இங்கே காணும் வற்று என்பதைத் தொல்காப்பியர் சாரியை என்று தெளிவாகச் சுட்டுகிறார் (காண்க: தொல், எழுத்து. 140). இங்கே இறுதியில் காணும் உம்மென் கிளவி விதியின் மூலம் வருவிக்கப்பட்ட ஒன்று. சந்தி விதியின் மூலம் வருவிக்கப்பட்டதாதலால் இதனைப் பிற்கால உரையாசிரியர்கள் சாரியை என்று கொள்கின்றனர். இவ்வாறே எல்லார் தம்மையும் எல்லா நம்மையும் எல்லீர் நும்மையும் ஆகியவற்றில் காணும் தம், நம், நும், என்பனவற்றைச் சாரியைப் பட்டியலிலேயே தெளிவாகச் சேர்த்து விட்டார்கள். ஆனால் தொல்காப்பியர் இவற்றைச் சாரியைப் பட்டியலில் சேர்க்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தம், நம், நும் முதலாய வற்றைத் தொல்காப்பியர் விதிகளின் மூலம் வருவித்திருக்கிறார் என்பது (தொல். எழுத்து. 192) உண்மைதான் என்றாலும் இவற்றை அவர் சாரியை என்று கொண்டார் என்பதற்குத் தகுந்த நேரடிச் சான்றுகள் எதுவும் இல்லை. ஆகவே சந்தி விதிகளால் அறிமுகப்படுத்தப்பட்ட எல்லாவற்றையும் சாரியை என்று கொள்வது எவ்வளவு தூரம் பொருத்தம் என்பது ஆராயத் தகுந்தது. தொல்காப்பியர் தாமே சாரியை என்று வெளிப்படையாகக் குறிப்பிட்டுத் தம்முடைய சாரியைப் பட்டியலில் சேர்க்காமல் விட்டுவிட்ட சாரியையும் ஒன்று உண்டு உழக்கே ஆழாக்கு, கலனே பதக்கு, ஆறே கால், ஏழே முக்கால் முதலாயவற்றில் காணும் ஏகாரத்தைத் தொல்

காப்பியர் ஏயென் சாரியை என்றே குறிக்கிறார் (காண்க: தொல். எழுத்து 165). ஆனால் இந்த ஏகாரம் அவர் கூறும் சாரியைப் பட்டியலில் இடம் பெறவில்லை. இது ஒன்றை மட்டும் சான்றாகக் கொண்டு தம், நம், நும், உம் முதலாய எல்லாமே தொல்காப்பியர் கருத்தின்படி சாரியை தான் என்று வாதிடுவது பொருந்தாது.

தொல்காப்பியர் காலத்தில் சில சாரியைகளை அவர் பிறழப் பிரித்திருக்கிறாரோ என்று எண்ண வாய்ப்புண்டு. அவர் கூறும் அக்குச் சாரியை இக்குச் சாரியை முதலாயவற்றையும் வற்றுச் சாரியையினையும் பிறழ் பிரிப்போ என்று கருதலாம். அவர் கூறும் வற்றுச் சாரியை வற்றாகவே கொள்ளப்பட வேண்டும்; அற்றாகக் கொள்ளவியலாது என்று வாதிடுவதற்கான ஆதாரங்கள் ஒன்றும் நமக்கு இப்போது கிடைக்கவில்லை. ஆகவே சில சாரியைகள் பிறழப் பிரிக்கப்பட்டிருக்கக் கூடும் என்று கருத இடமுண்டு. எனினும் இந்தச் செய்தி மேலும் ஆராய்ந்து முடிவு செய்யத்தக்கது.

ஆவின் கன்று, அரசின் புகழ் என்பவற்றில் காணும் இன் என்பது சாரியைதான் என்பது தெளிவு. இவையே ஆவினது கன்று என்றும் அரசினது புகழ் என்றும் வரும். இங்கே கண்ட இன் சாரியை பெயருக்கும் வேற்றுமை உருபுக்கும் இடையில் வந்தது. இந்த இன் சாரியை அன் ஈற்றுப் பெயர்களுக்குப் பின் வருவதில்லை. வேலனினை, அரசனினை, வேலனினது, அரசனினது எனச் சொற்கள் அமைவதில்லை என்பதைக் கருதுக. அன் ஈற்றுப் பெயர்களுக்குப் பின்னால் இன் சாரியை வருவதில்லை என்பது நன்கு தெளிவான பிறகு வேலனின் இல்லம், வேலனின் நட்பு வேலனின் மனைவி எனவரும் தொடர்களையும் காண்கிறோம். இங்கே நாம் காணும் இன் என் கிளவி சாரியையாக இருக்க இயலாது. சாரியை அல்லவெனில் அதனை நாம் ஆறன் உருபாகத்தான் கொள்ள வேண்டும். குன்றத்து இருந்தான் என்ற தொடரில் காணும் அத்து என்பதனை இடப்பொருள் குறித்ததாகக் கருதுவது பொருத்தமா? இங்கும் இதனைச் சாரியை என்று கருதலாமா? இத்தகைய வினாக்களுக்கு விடை காண மேலும் நாம் இது பற்றி ஆராய வேண்டும்.

தொல்காப்பியர் காலத்தில் முறையாக அரும்பிய சாரியைக் கோட்பாடு பிற்காலத்தில் சற்றுத் திசைமாறிச் சென்று சிறிது குழப்பத்துக்கும் இடந்தந்து விட்டது. வல்லினம், மெல்லினம் மிகுதலைப் போலவும் பிற மொழியில் உள்ள ஒற்று இரட்டுதலைப் போலவும் சொற்கள் சேரும்போது அவற்றிடையே வந்து சேருகின்ற ஒலியன் தொகுதிகளைச் சாரியை என்று கொள்வது பொருத்தம். வண்ணனை நோக்கில் பார்க்கும்போது இதுவே சாரியைக் கோட்பாட்டுக்குச் சிறந்த விளக்கமாகத் தெரிகின்றது.

வரலாற்று நோக்கில் சாரியைகளுக்கு வேறு வகையான விளக்கம் தரவும் வாய்ப்பு இருக்கலாம். சாரியைக் கோட்பாடு வண்ணனை இலக்கணத்துக்கே பெரிதும் உரியது ஆதலால் வண்ணனை நோக்கிலேயே சாரியைக் கோட்பாட்டை விளங்கிக் கொள்ள வேண்டும்.

இலக்கண நூல்கள் குறிப்பிடும் அசைநிலைக் கிளவிகள் வேறு, சாரியைக் கிளவிகள் வேறு என்பதை நாம் நன்கு நினைவில் கொள்ள வேண்டும். இரண்டு சொற்கள் சேரும்போது அவற்றின் இடையே தோன்றி நிற்பது சாரியை; அசைநிலைக் கிளவிகள் அப்படிப்பட்டன அல்ல. அசைநிலைக் கிளவிக் கோட்பாட்டைப் பற்றித் தனியாக ஆராய்வதே பொருத்தம்.

## பால் பாகுபாடு

தமிழில் உள்ள சொற்களை எல்லாம் இலக்கணப் புலவர்கள் ஐந்து வகையாகப் பகுத்திருக்கிறார்கள். பால் என்ற சொல்லுக்கே பகுப்பு அல்லது பகுதி என்று பொருள். நாளடைவில் பால் என்ற சொல் ஆண், பெண் என்ற சொற்களோடு சேர்ந்து பயின்று வந்த காரணத்தால் இக் காலத்தில் நாம் வழங்குகின்ற பாலுணர்ச்சி என்ற பொருளையும் விளக்கத் தொடங்கிற்று. இலக்கணங்கள் கூறும் பால்பாகுபாட்டைப் புரிந்து கொள்ளப் பால் என்ற சொல்லின் வேர்ப் பொருளை உணர்ந்து கொள்வது இன்றியமையாதது. பகு என்ற அடிச் சொல்லும் அல் என்ற விகுதியும் சேர்ந்து பகல் என்ற சொல்லையும் பால் என்ற சொல்லையும் உருவாக்கி யிருக்கிறது. பால் என்ற சொல்லின் வேர்ப்பொருள் பகுதிதான் என்பதை மீண்டும் நினைவு கூர்ந்து மேலே செல்வோம்.[24]

சொற்கள் பொதுவாக ஐந்து பாலாகப் பிரிக்கப்படும் என்று இலக் கணங்கள் கூறினாலும் இந்தப் பால் பகுப்பும் திணைப் பகுப்பும் சிறப்பாகப் பெயர்கட்கே உரியன என்பது எல்லோருக்கும் தெளிவாக விளங்கிய செய்தி. அப்படியானால் பெயர்ச் சொற்களை இருதிணை என்றும் ஐம்பால் என்றும் பிரித்ததற்குரிய அடிப்படை என்ன? இந்த வினாவிற்கு உரிய விடையை நாம் விளங்கிக் கொண்டால் தமிழிலக்கணப் புலவர்களின் பால் பாகுபாட்டுக் கோட்பாடு நமக்குத் தெளிவாக விளங்கும். பால் பாகு பாட்டின் அடிப்படையை ஆராய்ந்த பிறகு திணைப் பாகுபாடு பற்றியும் சிந்திப்போம். இலக்கிய வழக்கில் நாம் காணும் பெயர்ச் சொற்களில் இடப்பெயர்கள் தவிர ஏனையவற்றை எல்லாம் அவன், அவள், அவர், அது, அவை முதலாகிய ஐந்து பெயர்களையும் கொண்டு பதில் மாற்றம் (அல்லது பதிலீடு) செய்யலாம். அப்படிப் பதில் மாற்றம் செய்யும்பொழுது அவன் என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க பெயர்கள் எல்லா வற்றையும் ஆண்பால் என்ற பெயரால் சுட்டினர். அவ்வாறே அவள் என்ற பெயரால் பதில் மாற்றம் செய்யத்தக்க எல்லாப் பெயர்களையும் பெண்பால் என்றும் அவர் என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யதக்க பெயர்கள் எல்லாவற்றையும் பலர்பால் என்றும் அது என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யதக்க பெயர்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பால் என்றும் அவை என்ற சொல்லால் பதில் மாற்றம் செய்யத்தக்க பெயர்கள் எல்லாவற்றையும் பலவின் பால் என்றும் பிரித்தனர். அஃறிணையில் ஆண்பால் பெண்பால் என்று இரு பிரிவை அமைக்காமல் ஒன்றன்பால் என்று ஒரு பிரிவை மட்டுமே அமைத்தமைக்குக் காரணம் என்ன என்பது இப்போது விளங்கும். இதையே மேலும் விளக்கமாகக் காண்போம். களிறு, பிடி ஆகிய சொற்கள் முறையே ஆண் யானையையும் பெண் யானையையும் குறிக்கும். இப்படி ஒரு சில அஃறிணைப் பெயர்கள் தனித்

தனியே ஆணையும் பெண்ணையும் சுட்டுவனவாக அமைந்திருந்தாலுங்கூட நமது இலக்கணங்கள் அஃறிணைப் பெயர்களில் ஆண் பெண் பால் பகுப்பை அமைக்கவில்லை. ஏனென்றால் களிறு, பிடி, சேவல், பெடை ஆகிய பெயர்கள் அதுவென்னும் பெயரால் பதில் மாற்றம் செய்யத்தக்கன. ஆகவேதான் அஃறிணை ஆண்பால், பெண்பால் இரண்டையும் ஒன்றன் பால் என்ற ஒரு பகுப்பிலேயே அடக்கிக் கொண்டனர்.

நாம் இதுகாறும் விளக்கிய இந்த அடிப்படையினைப் பதில் மாற்றக் கொள்கை அல்லது பதிலீட்டுக் கொள்கை என்று குறிக்கலாம். தமிழில் காணும் பால் பாகுபாடு பதில் மாற்றக் கொள்கையின் அடிப்படையில் அமைந்துள்ளது. என்பது இப்போது நன்கு விளங்கியிருக்கும்.

பால் பாகுபாட்டிற்கு இந்தக் கொள்கையோடு தமிழிலக்கண மரபில் இன்னொரு கொள்கையும் துணையாக அமைந்திருக்கக் காண்கிறோம். அந்தக் கொள்கை பதில் மாற்றக் கொள்கையோடு ஒருவகையில் தொடர்புடையதே எனலாம்.

பின்வரும் சொற்றொடர்களைக் கவனித்துப் பாருங்கள்.

1. அவன் வந்தான்
2. அவள் வந்தாள்
3. அவர் வந்தார்
4. அது வந்தது
5. அவை வந்தன

மேற்காட்டிய தொடர்களில் எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையே ஒரு விதமான இயைபு அமைந்திருக்கிறது. இந்த இயைபு இதையுமானால் மேற்கண்ட தொடர்கள் பிழைபட்ட தொடர்களாக ஆகிவிடும். இதைத் தான் தொல்காப்பியர்

> வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
> பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
> மயங்கல் கூடா தம்மர பினவே

எனக் குறிக்கின்றார்.

தெரிநிலை வினைகள் காலமும் எதிர்மறையும் ஏற்றுப் பாலிட விகுதிகளோடு வரும்போது வினையில் தோன்றும் பாலிட விகுதிகளுக்கும் அவற்றிற்குரிய எழுவாய்க்கும் ஒருவித இயைபு அமைந்திருக்கக் காண்கிறோம். கால இடைநிலைகளை ஏற்காத குறிப்பு வினைக்கும் இந்த இயைபு உண்டு.[25] தெரிநிலை வினைகள் கால இடைநிலையையும் எதிர்மறை இடைநிலையினையும் ஏற்காமல் செய்க, செய்யட்டும், செய்யலாம் எனும் வாய்பாடுகளில் வரும்போதும் அவை எச்சவினைகளாக வரும்போதும் இத்தகைய இயைபுகள் அமைவதில்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்க செய்தி.

படர்க்கைப் பெயர்கள் மேற்காட்டிய முறையில் இலக்கியத் தமிழில் ஐந்து வகையான இயைபுகளைப் பெற்றிருக்கின்றன. இந்த இயைபினை எழுவாய் பயனிலை இயைபு என்று குறிக்கலாம். தமிழ் மொழியில் காணும் பால் பாகுபாட்டிற்கு நாம் இங்கு விளக்கிய எழுவாய் பயனிலை இயைபும் ஒரு அடிப்படை எனலாம்.[26]

பதில் மாற்றக் கொள்கை எழுவாய் பயனிலைக் கொள்கை ஆகிய இவற்றின் துணை கொண்டே நமது பழந்தமிழ் இலக்கணப் புலவர்கள் பெயர்களை ஐந்து பாலாகப் பகுத்திருக்கிறார்கள். இன்றைய இலக்கியத் தமிழை இந்தக் கொள்கைகளின்படி ஆராய்ந்தால் பால் பகுப்பை நாம் ஆறு என்று கொள்ள வேண்டி நேரும். இன்றைய இலக்கியத் தமிழுக்குரிய பால் பகுப்பு பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. | அவன் | ஆண்பால் |
| 2. | அவள் | பெண்பால் |
| 3. | அவர் | உயர் பால் |
| 4. | அவர்கள் | பலர் பால் |
| 5. | அது | ஒன்றன் பால் |
| 6. | அவை | பலவின் பால் |

இன்றைய இலக்கியத் தமிழில் காணும் எல்லாப் பெயர்களையும் மேலே காட்டிய ஆறு பெயர்களைக் கொண்டு பதில் மாற்றம் செய்ய முடியும். ஆகவே மேலே சுட்டிக் காட்டியபடி இன்றைய இலக்கியத் தமிழில் ஆறு பால்கள் உள்ளன எனலாம். எழுவாய் பயனிலை இயைபுக் கொள்கையும் இதே கருத்தை வலியுறுத்தும் என்பது கீழ்க்காணும் தொடர்களால் இனிது விளங்கும்.

1. அவன் வந்தான்
2. அவள் வந்தாள்
3. அவர் வந்தார்
4. அவர்கள் வந்தார்கள்
5. அது வந்தது
6. அவை வந்தன

பழந்தமிழில் காணும் பலர்பால் சொல்லாகிய அவர் இப்போது உயர் பாலுக்கு உரியதாகவும் அவர்கள் என்பது பலர் பாலுக்கு உரியதாகவும் அமைந்தமையால் பால் பகுப்பு விரிவு பெற்றமை காண்க.

பதில் மாற்றக் கொள்கையின் அடிப்படையில்தான் உயர்திணை, அஃறிணை என்று திணைப் பகுப்பும் அமைந்திருக்கிறது என்பது நன்கு பெயர்களை ஆராயும்போது தெளிவாகிறது. யார் என்ற வினாப் பெயரால் பதில் மாற்றம் செய்யத்தக்க எல்லாப் பெயர்களும் ஒருவகை என்றும் என்ன அல்லது எவன் என்ற வினாப் பெயரால் பதில் மாற்றம் செய்யத் தக்க எல்லாப் பெயர்களும் இன்னொரு வகை என்றும் கொள்ளுவோம்.

இந்த இரண்டு பெரும் பிரிவுக்குள் தமிழில் உள்ள எல்லாப் பெயர்களையும் அடக்கலாம். முதலாவது வகைக்குரிய பெயர்களை உயர்திணை என்றும் இரண்டாவது வகைக்கு உரிய பெயர்களை அஃறிணை என்றும் பிரித்திருக்கிறார்கள்.

தமிழிலக்கணங்களில் காணும் திணை, பால் பாகுபாட்டிற்கு மிக இன்றியமையாத இலக்கணக் கொள்கை சார்ந்த அடிப்படை உண்டு என்பது இப்போது நன்கு விளங்கியிருக்கும்.

## வேற்றுமை இலக்கணக் கோட்பாடுகள்

பொருள் வேற்றுமை செய்கின்ற உருபுகளை வேற்றுமை உருபுகள் என்று பொதுவாக வரையறுப்பர். ஆனால் இந்த வரையறை நமக்குப் போதிய அளவிற்கு விளக்கம் அளிப்பதாகத் தோன்றவில்லை. கீழ்க் காணும் தொடர்களை ஆராய்ந்து பாருங்கள்.

1. கண்ணன் வந்தான்
2. கண்ணனும் வந்தான்
3. கண்ணனோடு வந்தான்

மேற்கண்ட தொடர்களில் உம், ஒடு ஆகிய இரண்டு கிளவிகளுமே பொருளில் வேறுபாட்டை உண்டாக்கக் காண்கிறோம். இருப்பினும் உம் என்பதை நாம் வேற்றுமை உருபாக ஏற்றுக்கொள்ளுவதில்லை; ஒடு என்பதை மட்டுமே வேற்றுமை உருபு என ஏற்றுக் கொள்கிறோம். இதற்குக் காரணம் என்ன?

கண்ணனும் வந்தான் என்ற தொடரில் உம் என்ற கிளவி சேர்ந்திருந்தாலும் கண்ணன் வந்தான் என்ற தொடரில் இருந்து இது அடியோடு மாறுபட்டு நிற்கவில்லை. ஆனால் கண்ணனோடு வந்தான் என்ற தொடர் கண்ணன் வந்தான் என்ற தொடரில் உள்ள அடிப்படைப் பொருளையே மாற்றி விடுகிறது. அதாவது முதல் தொடரில் எழுவாயாக இருந்த ஒன்று மூன்றாவது தொடரில் உடனிகழ்ச்சிக்கு உரிய பொருளாக மாறி விடுகிறது. இப்படி அடிப்படைப் பொருளையே மாற்ற வல்ல கிளவிகளை மட்டுமே நம்முடைய இலக்கணப் புலவர்கள் வேற்றுமை உருபு எனக் கொண்டனர். கீழ்க்காணும் தொடர்கள் மேலும் இந்த உண்மையைத் தெளிவுப்படுத்தும்.

4. அ. வளவன் கொடுத்தான்
   ஆ. வளவனுக்குக் கொடுத்தான்
5. அ. அரசன் பார்த்தான்
   ஆ. அரசனைப் பார்த்தான்
6. அ. புலவர் சென்றார்
   ஆ. புலவரிடம் சென்றார்

மேலே காணும் காட்டுகள் வேற்றுமை உருபுகளுக்கு நாம் தந்த விளக்கத்தை நன்கு தெளிவுபடுத்தும்.

## பெயரீடு

வேற்றுமைகளுக்குப் பெயரிடும்போது மூன்று வகையான அடிப் படைகளில் நம்முடைய இலக்கணப் புலவர்கள் பெயரிட்டிருக்கிறார்கள். ஒரு வேற்றுமைக்கு ஒரு உருபு என்ற நிலையில் உருபு அடிப்படையில் பெயரிடு வதற்கே தொல்காப்பியர் முதன்மை தந்திருக்கிறார். ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி, ஒடுவெனப் பெய்ரிய வேற்றுமைக் கிளவி, குவ்வெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி, இன்னெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி, அது வெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி, கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி ஆகிய சொல்லாட்சிகள் இந்த உண்மையை நமக்கு நன்கு புலப்படுத்து கிறது. பொருளடிப்படையிலும் கூட வேற்றுமைகளுக்குப் பெயர்கள் இடப் பட்டுள்ளன. எழுவாய் வேற்றுமை முதலாய சொல்லாட்சிகளின் மூலம் இந்த உண்மையை உணர்கிறோம். இந்த இரண்டு முறைகளோடு எண்ணு முறை அடிப்படையிலும் வேற்றுமைகளுக்குப் பெயர்கள் அமைந்திருக்கக் காண்கிறோம். முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை முதலாய குறியீடுகள் பொதுவாக எல்லோருக்கும் நன்கு தெரிந்தவை.[27]

## ஒரு பெயருக்குப் பின் ஒரு உருபு

ஒரு பெயருக்குப் பின் ஒரு வேற்றுமை உருபு மட்டுமே வர முடியும். ஒன்றுக்கு மேற்பட்ட உருபுகள் அடுக்கிவா இயலாது. உருபு தொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி எனவரும் தொல்காப்பிய நூற்பாவிற்கு விளக்கங்கூறிய இலக்கணப் புலவர்கள் ஆறாம் வேற்றுமை உருபுக்குப் பின்னால் ஏனைய வேற்றுமை உருபுகள் வாலாமென்று கருதி விளக்கம் தந்தி ருக்கிறார்கள். சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால் சாத்தனதற்கு முதலாய சொற்களை இலக்கணப் புலவர்கள் எடுத்துக் காட்டுகளாய்த் தந்திருக்கிறார்கள். இந்த விளக்கம் பொருந்தாது. முன்னமே ஒரு வேற்றுமையை ஏற்று நிற்கும் பெயர் இன்னொரு வேற்றுமையை ஏற்க இயலாது. இங்கே இவர்கள் காட்டியுள்ள எடுத்துக்காட்டுகளில் காணும் அது என்பது ஆறாம் வேற்றுமை உருபு அல்ல. அதனைக் குறிப்பு வினையாலணையும் பெயரில் உள்ள விகுதி என்று கொள்ள வேண்டும். இந்த நூல் எனது என்ற தொடரில் காணும் அது என்பது குறிப்பு வினைமுற்று விகுதியே தவிர வேற்றுமை உருபு ஆகாது. எனது என்ற குறிப்பு வினைமுற்று ஏனைய வினைமுற்று போலவே வினையாலணையும் பெயராக மாறலாம். எனது என்பது குறிப்பு வினையாலணையும் பெயராக மாறிய பிறகு வேற்றுமை உருபுகளை ஏற்கலாம்.[28] இந்த முறையில் தான் சாத்தனது என்பதும் குறிப்பு வினைமுற்றாக நின்று பிறகு குறிப்பு வினையாலணையும் பெயராக மாறி ஐ, ஆல் முதலாய வேற்றுமை உருபுகளை ஏற்றது. உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி என்பதற்கு வேற்றுமை உருபுகளை ஏற்ற பெயர்களை அடுக்கி வந்த தொடர் என்று பொருள்கொள்வதுதான் பெருத்தமாக இருக்கும். வேற்றுமையின் மேல்

வேற்றுமை நின்றது என்பது பொருந்தாது. ஒரு பெயருக்குப் பின்னால் ஒன்றுக்கு மேற்பட்ட வேற்றுமை உருபுகள் ஒரே நேரத்தில் வர முடியாது என்பது ஒரு திட்டவட்டமான வேற்றுமைக் கோட்பாடு என்றே கூறலாம்.

எல்லா வேற்றுமைகளையும் ஒப்பிட்டு ஆராயும்பொழுது விளி வேற்றுமை மட்டும் ஏனைய வேற்றுமைகளோடு சில வகையில் ஒத்தும் பல வகையில் வேறுபட்டும் நிற்கக் காணலாம். ஏனைய வேற்றுமைகள் யாவும் ஒரு முற்றுத் தொடரின் அக உறுப்புகளாகவே வருகின்றன. ஆனால் விளி வேற்றுமை மட்டும் ஒரு முற்றுத்தொடரின் புற உறுப்பாக நிற்கிறது. கண்ணா, நீ இங்கே வா என்ற தொடரில் கண்ணா என்பது மட்டும் புற உறுப்பாக நிற்றல் காண்க. கண்ணா என்ற விளி மட்டுமே வேறு தொடர் இன்றியும் கூடத் தனித்து நிற்கலாம். இந்த இயல்பு ஏனைய வேற்றுமைகளிலிருந்து வேறுபட்டதாக இருக்கிறது.

அம் ஈற்றுப் பெயர்கள் வேற்றுமை ஏற்கும்பொழுது அத்துச்சாரியை ஏற்பது பெரு வழக்கு. ஆனால் அவை விளி ஏற்கும் பொழுது அத்துச் சாரியை பெறுவதில்லை.[29]

டுறு என்பவற்றைக் குற்றுகர ஈறாகக் கொண்ட பெயர்கள் வேற்றுமை ஏற்கும்போது டகர றகர ஒற்றுகள் இரட்டிக்கும். ஆனால் அந்தப் பெயர்கள் விளி ஏற்கும்போது அவ்வாறு இரட்டிப்பதில்லை. மரமே, நிலமே, நாடே, பொன் நாடே, வற்றாத ஆறே, என விளி யேற்று வந்த பெயர்களை ஒப்பிட்டு ஆராய்ந்தால் மேலே சொன்ன செய்திகள் நன்கு விளங்கும். விளி வேற்றுமைக்கு உரிய இத்தகைய தனித்தன்மைகளைக் கருதித்தான் தொல்காப்பியனார் விளிமரபு என ஒரு தனி இயல் வகுத்தார் போலும்.

இதுவரை கூறிய செய்திகளால் வேற்றுமை வரையறையும் அதன் வகைப்பாடும் வேற்றுமை உருபுகளுக்கு உரிய சில சிறப்பியல்களும் நன்கு விளங்கியிருக்கும்.

மொழியியல் என்ற புதியதோர் அறிதுறை உலக மொழிகளின் இயல்புகளையும் இயக்கங்களையும் ஆராய்ந்து அறிவிப்பதோடு தேவைக்கேற்ற வகையில் திட்டமிட்டு மொழியை வளர்க்கவும் உதவுகிறது. இந்த மொழியியற்கலை நம்முடைய மரபிலக்கணக் கோட்பாடுகளை அறிந்து கொள்ளவும் வளர்க்கவும் உறுதுணையாக விளங்குகிறது. இங்கே நாம் தமிழிலக்கண உலகில் கண்ட ஒரு சில இலக்கணக் கோட்பாடுகளையே விளக்கியுள்ளோம். மேலும் ஆராய்ந்து விளக்க வேண்டிய கோட்பாடுகள் இன்னும் ஏராளமாக உள்ளன.[30]

## அடிக்குறிப்புகள்

1. பேச்சு வழக்கு என்பது அன்றாட வாழ்வில் மக்களிடையே பயின்று வரும் வழக்கு. இலக்கிய வழக்கு என்பது புலமைசான்ற மக்களிடையே எழுத்து வழக்கிற்குப் பயன்படும் வழக்கு. நாடக வழக்கு என்பது இருவகை வழக்கும் கலந்த நிலையில் புதுமையாக உருவாக்கப்பட்ட சொற்களையும் கொண்டு அமையும் ஒரு புதுமை வழக்கு.
2. காண்க இறையனார் களவியல் முதல் நூற்பாவின் உரைப்பகுதி.
3. காண்க நன்னூல் நூற்பா 131.
4. காண்க நன்னூல் நூற்பா 60, 61.
5. வகைப்பாட்டுக்கு ஒரு குறிப்பிட்ட அடிப்படை வேண்டும். பல அடிப் படைகளைப் பயன்படுத்தி வகைப்பாட்டைக் குழப்பமானதாக ஆக்கக் கூடாது.
6. காண்க பொன் கோதண்டராமனின் Modern Studies in Tamil, pp. 61-68.
7. காண்க நன்னூல் நூற்பா 49.
8. பொதுவாக எந்த அறிவியலுக்கும் இந்த வகைப்பாட்டுக் கோட்பாடு பொருந்தும்.
9. குற்றியலுகர ஈற்றை உயிரீறாகக் கொள்வது தொல்காப்பியர்க்கு உடன் பாடில்லை. நன்னூலார் அதனை உயிரீறாகக் கொண்டது பொருத்த மாகத் தோன்றவில்லை.
10. 'ஏவவேனைய கண்ணார்' என்ற தொடரில் ஏ என்பது அம்பு என்ற பொருளில் வந்தது.
11. அவ்—து என்பது அஃது என்றும் இவ்—து என்பது இஃது என்றும் மாறின. இவ்வாறே கவ்—சு என்பது கஃசு என்றும் கவ்—பு என்பது கஃபு என்றும் மாறியுள்ளன. எவ்—கு என்பது எஃகு என மாறினமை இப்போது நன்கு விளங்கும்.
12. காண்க நன்னூல் நூற்பாக்கள் 60, 61.
13. காண்க முத்து வீரியம், எழுத்து நூற்பா 22.
14. காண்க இலக்கணத் தொகை—எழுத்து (பதிப்பு ச. வே. சுப்பிரமணியன்) ப-ம். 22. அட்டவணை சில மாற்றங்களோடு இங்கே தரப்பட்டுள்ளது. தொன்னூல் விளக்கத்துக்கு ச. வே. சுப்பிரமணியன் தந்துள்ள சார் பெழுத்துக் கணக்கு பிழையானது. தொன்னூல் விளக்கம் கூறும் சார்பெழுத்துகளின் வகை பத்து—ஒன்பதல்ல. காண்க தொன்னூல் விளக்கம் நூற்பா 6.
15. காண்க தொல் எழுத்து, நூற்பா 289.
16. காண்க தொல். எழுத்து, நூற்பா 357.
17. காண்க தொல். எழுத்து, நூற்பா 446.
18. திருக்குறள் 44, 446.
19. காண்க தொல். எழுத்து, நூற்பா 327.

20. காண்க தொல். எழுத்து, நூற்பாக்கள் 190, 191, 192.
21. காண்க நன்னூல் 132 ஆம் நூற்பாவின் உரைப்பகுதி—(சிவஞான முனிவர் விருததியுரை).
22. தொல்காப்பியர் கால மொழியில் அம் ஈற்றுப் பெயர்கள் அத்துப் பெற வேண்டுமென்று கட்டாயமில்லை காலமொடு தோன்றும் என்பன போன்ற தொடர்கள் இதை உறுதிப்படுத்தும்.
23. காண்க நன்னூல் நூற்பா 244.
24. பகுதி பாதி, புழுதி, பூதி—இந்தச் சொற்களை ஊன்றிக் கவனியுங்கள். மொழியிடை உயிர்மெய் மறைவினால் மொழிமுதல் உயிர்மெய் நெடிலாக மாறியது. இவ்வாறே துகள் என்பதிலும் க என்ற உயிர்மெய் மறைந்து து என்பது நெடிலாக மாறியது. இத்தகைய மாற்றத்தால்தான் பால் என்ற சொல்லும் உருவாகியுள்ளது.
25. காண்க டாக்டர் பொற்கோவின் இலக்கண உலகில் புதிய பார்வை, பக் *60–61.*
26. காண்க Linguistic Studies in Tamil by Pon Kothandaraman, pp. 11-18.
27. காண்க தொல். சொல். நூற்பா *103.*
28. மேலும் விளக்கங்கட்குக் காண்க டாக்டர் பொற்கோவின் இலக்கண உலகில் புதிய பார்வை, ப-ம். *60–66.*
29. டாக்டர் அ தாமோதரன் அவர்கள் விளிவேற்றுமை பற்றிய கருத்துரையாடலின் போது இந்தக் கருத்தினையும் தெரிவித்தார்.
30 டாக்டர் செ. வை. சண்முகம் அவர்கள் எழுதிய எழுத்திலக்கணக் கோட்பாடுகள் என்ற நூலும் டாக்டர் ச. அகத்தியலிங்கனார் எழுதிய சொல்லியல் தொகுதிகளும் இலக்கணக் கோட்பாட்டு நோக்கில் மிகவும் போற்றிக் குறிப்பிடத்தக்க நூல்கள் எனலாம்.

## உசாத்துணைக் குறிப்பு

1. இறையனார் களவியல், கழகம், சென்னை, 1958.
2. Pon. Kothandaraman, *Modern Studies in Tamil*, Tamil Nuulagam, Madras, 1976.
3. —*Linguistic Studies in Tamil*, Madras, 1980.
4. டாக்டர் ச வே. சுப்பிரமணியன் (ப. ஆ.), இலக்கணத் தொகை-எழுத்து நாகர்கோயில், 1967.
5. திருவள்ளுவர், திருக்குறள், கழகம், சென்னை, 1958.
6. தொல்காப்பியர், தொல்காப்பியம் (எழுத்து), கழகம், சென்னை, 1955.
7. தொல்காப்பியர், தொல்காப்பியம் (சொல்), கழகம், சென்னை, 1955.
8. பவணந்தி, நன்னூல் (சிவஞான முனிவர் விருத்தியுரை), கழகம், சென்னை, 1958.
9. பொற்கோ, இலக்கண உலகில் புதிய பார்வை, சென்னை, 1978.
10. முத்து வீர உபாத்தியாயர், முத்து வீரியம், கழகம், சென்னை, 1889.

# "திருவள்ளுவரின் முன்மைத்திறம்"

டாக்டர் சு. பாலச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர், தமிழிலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்.

ஓர் இலக்கியத்தினை உருவாக்கி வழங்கும் மாபெரும் படைப்பாளர் ஒரு புதிய உலகத்தை, ஒரு புதிய வாழ்க்கையை, ஒரு புதிய கலையை, வழிவழியாக வருவோர்க்கு வழங்க வல்லவராக விளங்குகின்றனர். இலக்கியப் படைப்பாளர் அங்ஙனம் வழங்க, ஒவ்வொரு காலகட்டத்திலும் வாழும் மனித சமுதாயம் அப்புதிய உலகைக்கண்டு மகிழ்கின்றது; அப்புதிய வாழ்க்கையைக் கண்டு அனுபவிக்கின்றது; அப்புதிய கலையாக்கத்தில் காணப்படும் கூறுகளை உற்றுநோக்கி உள்ளத்தால் மகிழ்ந்து போற்றுகின்றது. மனித நெஞ்சங்களின் முழுமையை, மனித வாழ்வின் பல்வேறு நிலைகளை, இயற்கையின் பரந்து விரிந்து பட்ட கோலங்களை நன்கறிந்து மிகமிக ஆழமான ஓர் அறிவுத்திறத்தைப் பெற்ற கலைப்படைப்பாளர் தாம் ஏதோ ஒரு கால எல்லைக்குள் வாழ்ந்து முடிந்தவராக இருப்பினும் அன்னோர்க்கு அமைந்திருந்த தனிச்சிறப்பாம் முன்மைத்திறத்தால் (Originality), இடங்கடந்தும் காலங்கடந்தும் வாழும் மக்களை ஈர்க்கவல்ல போற்றல் படைத்தவராய் விளங்குகின்றனர். இம்முன்மைத்திறம் என்பது இலக்கியப் படைப்பாளராலும் கலைவாணராலும் என்றைக்கும் விரும்பப் படும் ஒன்றாகும். இம்முன்மைத்திறம் எவ்வெப்போது ஒருவரிடம் தலை சிறந்து விளங்குகிறதோ அவ்வப்போது என்றும் நின்று வழங்கவல்ல கூறுகளைத் தன்னகத்தே கொண்டிருக்கும் செம்பொருள் இலக்கியங்கள் எழுகின்றன. அத்தகைய செம்பொருள் இலக்கியங்கள் தோன்றுவதற்குரிய மூல ஆதார சுருதி இலக்கியப் படைப்பாளரின் முன்மைத் திறத்தின் கண்ணே அமைந்திருக்கின்றது. இனி, முன்மைத்திறம் என்பதன் வரையறையையும் விளக்கத்தையும் காண்போம்.

## முன்மைத்திறம் (Originality) வரையறையும் விளக்கமும்

ஒரு கவிதையைப் பயிலும்போது, இதுவரை இத்தகைய கவிதையை வேறு எவரும் எழுதவில்லை என்று நாம் நினைப்பது உண்டு. ஒரு நாவலைப் படித்து முடிக்கும் போது, இந்த நாவலில் இடம்பெறும் இது போன்றதொரு கதைப் பாத்திரத்தை வேறு எந்த நாவலிலும் பார்த்த தில்லை என்பது போன்ற ஓர் அனுபவம் நமக்கு ஏற்படுவதுண்டு. ஒரு காவியத்தைப் பயிலும்போது, அதில் வரும் சில உவமைகளைச் சுவைத்து இன்புறும்போது, இதுவரைக்கும் இத்தகு உவமைகளை வேறு எந்த காவியக் கலைஞரும் கையாண்டதில்லை என்று நாம் நினைப்பதுண்டு. ஒரு திரைப்

படத்தைப் பார்க்கும்போது, அதில் இடம்பெறும் மிகப்புதிய கதைப் போக்கினைக் கண்டோ, புத்தம் புதியதாக வார்த்து எடுக்கப்பெற்ற இசை மெட்டினைக் கேட்டோ நாம் மிகமிக வியப்பதும் உண்டு.

இவ்வாறெல்லாம் படைக்கப் பெற்றதோர் இலக்கிய வகையில் அல்லது கலையில் புத்தம் புதியதாகக் காணப்படும் ஓர் அரிய புதுமையை, நாம் வியக்கும்படி, படைத்து வழங்கும் இலக்கிய ஆற்றலுக்கு அல்லது கலையாற்றலுக்கு மூல ஊற்றாய் அமைந்தது எதுவோ, மூலவித்தாய் அமைந்தது எதுவோ, கருத்தால் அல்லது வடிவத்தால் இதுவரைக்கும் எவரும் காணாப் புதுநோக்கில் ஒன்றைக் கண்டு காட்டும் இலக்கியக் கலைத் திறன் எதுவோ அதுவே முன்மைத்திறம் (Originality) எனப்படும்.[2]

இந்த முன்மைத்திறனால் கலைஞர் அல்லது இலக்கியப் படைப்பாளர் மற்றவரிடத்தினின்றும் வேறுபட்டு விளங்குவர். தாம் சொன்ன ஒன்றையே மற்றவர் சொல்லி இருப்பினும் தாம் சொல்லும் முறையிலேனும், தம் முன்மைத்திறனைப் படைப்பாளர் காட்டுவது உண்டு.

இவ்வாறன்றி, தாம் சொல்லும் பொருளையே புதுமை உடையதாக ஆக்கும் கலைத்திறனும் உண்டு. இங்ஙனம் நோக்கும் போது, ஒருவரின் முன்மைத்திறனைப் பொருள் முறையிலோ (Subject matter), வெளியீட்டு முறையிலோ (Mode of treatment) புலப்படுத்தலாம். கவிதையாயினும் சரி, நாவலாயினும் சரி, வேறு எவ்வகைக் கலைத்துறையேயாயினும் சரி அதிலெல்லாம் சிந்தனை அல்லது வடிவத்தில் படைப்பாளரின் முன்மைத் திறம் கலந்து, மெருகேறி, கவின் பெற்று விளங்கும். சுழன்று கொண்டிருக்கும் ஒரு மின்விசிறியின் காற்று பரவலாகச் சென்று சுகம் அளிப்பது போல, இலக்கியப் படைப்பாளரின் முன்மைத்திறம் என்பது பொருள் மயமாகவோ, வடிவ மயமாகவோ பரந்துபட்டு, பயில்வார்தம் நெஞ்சை ஈர்த்து, உணர்வொடு கலந்து, உள்ளத்திற்கு இனிய புதுமை விருந்தளிக்கும்.

'கவிதையும் கவிதையியலும் பற்றிய பிரின்ஸ்ட்டன் கலைக்களஞ்சியம் குறிப்பிடுவதாவது: முன்மைத்திறம் என்பது மரபாகவும் வழக்கமாகவும் வருகின்ற ஒன்றன்று; மற்றொரு படைப்பாளருடைய சிந்தனையையோ, எழுத்துக்களையோ, கலைக் கண்டுபிடிப்புக்களையோ தாம் படைப்பது போலக் காட்டுவதுமன்று; முன்னே வந்ததாகிய ஒன்று மீண்டும் வருவது மன்று; ஒரு கவிதையோ அல்லது குறிப்பிட்ட ஒரு கலைக்கூறோ புதுமையைப் பிரதிபலிக்கும் வகையில் முன்மைத்திறம் அமைகின்றது. அப்புதுமை சொல்லாட்சியிலோ, காட்சியிலோ, மோனை எதுகைத் தொடையிலோ, கலை உத்தியிலோ, அமைப்பு வண்ணத்திலோ இருக்கலாம். வழங்கிவரும் ஓர் இலக்கிய வகையை மாற்றி வழங்கும் பாங்கிலும் அமையலாம்; புதிய ஓர் இலக்கிய வகையை உருவாக்கி வழங்குவதில் அமையலாம்; இலக்கிய உலகில் அறிமுகம் ஆகாத மனித வாழ்க்கையின் ஒரு பகுதியை எடுத்துக் காட்டும் வகையிலும் விளங்கலாம்; அல்லது மனிதனின் செயலையோ, அவன் வாழ்க்கைப் போக்கையோ புதுமுறையில் விளக்கிக் காட்டும் நெறியிலும் அமையலாம்.[3]

நாம் ஒரு புதிய நகருக்குப் போகிறோம்; வேறு எங்கும் காணாத சில கட்டிட அமைப்புக்களையோ, அழகான சில தெருக்களையோ, மனிதர்களுடைய புதிய நடையுடை பாவனைகளையோ காணும்போது மருண்டு நோக்குகின்றோம். அந்நகரின் தனித்தோற்றமும் தனிக்கவர்ச்சியும் நம் முள்ளத்தைப் பெரிதும் ஈர்ப்பது போல, கலையின் அல்லது கலைஞர் ஒருவரின் முன்மைத்திறம் அவர் படைப்புக்களின் ஊடாக அரும்பி மலரும் போது, நமது கலையுள்ளம் வியந்து பாராட்டிப் புதுமையால் நிறைந்து மகிழ்கின்றது. முன்மைத்திறத்தோடு இயற்றப்பட்ட ஒரு கவிதை, கவிஞர் ஒருவரின் தனிப்பண்பையோ, தனி மனோபாவத்தையோ, தனித்த கண்ணோட்டத்தையோ புலப்படுத்தக் கூடும். ஆதலால் முன்மைத்திறம் பாரட்டிற்குரியதாகின்றது.

## திருவள்ளுவரின் முன்மைத்திறம்

தமிழக மண்ணில் தோன்றி, தலையாய இலக்கியப் படைப்பாளராய் விளங்கியவருள் திருவள்ளுவர் முதன்மைச்சிறப்பு உடையவராய் விளங்குகின்றார். கடந்த காலத்தின் நிலைகளையும் தம் காலத்தின் நிலைகளையும் அறிந்தவராய், வருங்கால நிலைகளைக் கணித்துக் காணவல்லவராய் திருவள்ளுவர் விளங்குகிறார் என்பது உய்த்துணரத்தக்கது. ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் வாழ்ந்த அவரின் கருத்துக்கள் வழிவழியாய் வந்த கவிஞராலும் காவியப் படைப்பாளராலும் சிந்தனையாளராலும் இன்றுவரை எடுத்தாளப் பெறுவதே அவர் தம் முதன்மைச் சிறப்பினைக் காட்டுவதாகும். அம்முதன்மைச் சிறப்பினை அவர் அடையக் காரணம் அவரிடம் அமைந்திருந்த முன்மைத்திறமே (Originalitiy) ஆகும். அவருக்கு அமைந்த வேறு பெயர்களுள் 'முதற்பாவலர்' என்பது பெரிதும் குறிப்பிடத்தக்கது. கருத்து வகையில், சிந்தனைவகையில் பல்வேறு வாழ்க்கைத் துறையினுள்ளும் நுழைந்து தாம் கண்டறிந்த நுண்மாண் கருத்துக்களை இவ்வுலகிற்கு வழங்கிய காரணத்தினால் அவருக்கு, 'முதற்பாவலர்' என்ற பெயர் தோன்றியிருத்தல் வேண்டும். பொருள் வகையிலும் சரி, வடிவ வகையிலும் சரி திருவள்ளுவரின் முன்மைத்திறம் பெரிதும் வியந்து போற்றக்கூடியதாய் விளங்குகின்றது. உலகச் சிந்தனையாளர் பல்லோரின் சிந்தனைத்திறத்தையும் திருவள்ளுவரின் சிந்தனைத் திறத்தையும் ஒப்பீட்டு முறையில் நோக்கும் போது, இவரின் சிந்தனைத்திறம் முழுமை நிறைந்ததாக, செம்மை சான்றதாக, உலகியல் அடிப்படை உண்மைகள் அனைத்தையும் தழுவியதாக, முன்மைத்திறம் நிறைந்ததாக விளங்குகின்றது. அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளையும் இவர் அணுகியுள்ள முறையும் விரித்துக்காட்டும் பாங்கும் ஒவ்வொரு பொருளையும் புதுப்புது முறையில் விளங்கத்தெரிவிக்கும் வித்தகமும் வியப்புற அமைந்துள்ளன. இவர்காட்டும் பல்வகைப் பொருளுக்குள்ளே-சிந்தனைக்குள்ளே-கருத்துக்குள்ளே இவரது முன்மைத்திறம் பலப்பல வகையில் ஒளிவீசுகின்றது. சுருங்கக் கூறின், இவரது முன்மைத்திறம் கீழ்க்காணும் வகையியெல்லாம் புலனாகின்றது எனலாம்.

1. வாழ்வியல் கூறுகளை முழுமையாகக் காட்டியுள்ளமை.

2. காலம் கடந்தும் இடம் கடந்தும் தம் கருத்துக்களை ஆற்றல் சான்றவைகளாக விளங்கும் வண்ணம் அவற்றை நிறுத்தியுள்ளமை;

3. எம்மொழியினரும் எவ்வினத்தவரும் எந்நாட்டவரும் அறிந்து பின்பற்றுவதற்குரிய வாழ்க்கை வழிமுறைகளை வகுத்துக் காட்டியுள்ளமை.

4. சொற்கள் சிலவற்றை அமைத்து அவற்றால் விளங்கும் பொருள் காலத்திற்குக் காலம் அவ்வக்காலத்தின் தேவைக்கேற்ப விரிந்து, நெகிழ்ந்து பயன் விளைக்கும் வண்ணம் அமைத்துள்ளமை.

5. வேண்டுமிடந்தோறும் தாம் விளக்க வந்த பொருளை அல்லது ஒரு கருத்தை நன்கு வரையறுத்து வழங்குகின்றமை.

திருவள்ளுவமாலையில்,

இன்பம் பொருள்அறம் வீடென்னும் இந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல் மன்பதைகட்
குள்ள அரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

என்று நரிவெரூஉத்தலையார் பாடியதும்[4]

எல்லாப் பொருளும் இதன்பா லுளவிதன்பால்
இல்லாத எப்பொருளு மில்லையாற் சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

என்று மதுரைத் தமிழ் நாகனார் பாடியதும்[5] மேற்குறித்தவற்றுள் முதற் செய்தியினைப் புலப்படுத்துகின்றன.

இறையனார் என்பார்,

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க் குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர் போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்[6].

என்று பாடியுள்ளது, இடங்கடந்தும் காலம் கடந்தும் ஒளிவீசவல்ல திருவள்ளுவரின் சிந்தனைத்திறத்தைக் குறிக்கின்றது. கல்லாடர் என்பார்,

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.[7]

என்பதால் எப்பாலவரும் ஏற்றுக்கொள்ளத்தக்க வண்ணம் திருவள்ளுவரின் சிந்தனை விளங்குகின்றமையை விளங்கிக் கொள்ளலாம்.

இனி, கபிலர் என்பார்,

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தான்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.[8]

என்று பாடியதும் உருத்திரசன்ம கண்ணர் என்பார்,

மணற்கிளைக்க நீரூறும் மைந்தர்கள் வாய்வைத்
துணைச்சுரக்குந் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்
காய்தொறும் ஊறும் அறிவு.[9]

என்று பாடியதும் குறள் வெண்பாவில் வள்ளுவர் செய்துள்ள அதிசயத்தையும் ஆய்வாளர் ஆராய ஆராய அறிவூறும் வண்ணம் அமைந்துள்ள வள்ளுவரின் சிந்தனைப் பெருக்கையும் உணர்த்துகின்றன.

'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்' என்றும் 'வாய்மை எனப்படுவதியாதெனின் யாதொன்றும் தீமை இல்லாத சொலல்' என்றும் 'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு, என்றும் வரும் குறட்பாக்கள் போல்வன எதனையும் வரையறுத்துச் சொல்லும் திருவள்ளுவரின் சிந்தனையை வெளிப்படுத்துகின்றன.

நமக்கு முன்பாகவே, திருவள்ளுவ மாலையில் வரும் வெண்பாக்களைப் பாடியுள்ளோர், மிகப் பழங்காலத்திலேயே திருவள்ளுவரின் சிந்தனைத் திறத்தையும் அதன் வாயிலாக விளங்கும் முன்மைத்திறத்தையும் கண்டறிந்து போற்றுவதில் ஈடுபட்டுள்ளனர் என்பதை நாம் அறிய முடிகின்றது. பல நூறு ஆண்டுகளுக்குப் பின் தோன்றிய உலகக் கவிஞர் பாரதியார்,

"யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மை வெறும் புகழ்ச்சியில்லை"[10]

என்று பாடியமைக்குரிய காரணங்களுள் ஒரு முக்கிய காரணம் திருவள்ளுவரிடம் அமைந்திருந்த முன்மைத் திறமாக இருக்கலாம்.

**பொருள்வகையில் திருவள்ளுவரிடம் அமைந்திருந்த முன்மைத் திறத்திற்கு மேலும் சில சான்றுகள் :**

1. முதல் அதிகாரமாகிய 'கடவுள் வாழ்த்து' சமயச்சார்பு கடந்து, எல்லாச் சமயத்திற்கும் பொதுவாகிய இறைவழிபாட்டைக் குறித்துப் பல்வகையிலும் அவர் ஆராய்ந்துள்ள சிந்தனைத்திறத்தைப் புலப்படுத்து கின்றது. ஒரு குறிப்பிட்ட கடவுளை வணங்கும் வணக்கத்தினின்றும் வேறுபட்டு, கடவுளர்க்கெல்லாம் மூலக்கடவுளாக இருக்கும் ஒருபேர் இறைவனைக் கண்டு காட்டும் புதுமையை நாம் காணுகின்றோம். இப் புதுமை வாயிலாக அவரது முன்மைத்திறத்தை நாம் அறிகின்றோம்.

2. 'வான்சிறப்பு' என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் மழையை 'அமிழ்தம்' என்று குறிப்பிடுகின்றார். அமிழ்தம் என்பது உண்டாரை நெடுநாள் வாழ்விக்கும் என்று சொல்லப்படுகின்றது :

> வானின்று உலகம் வழங்கி வருதலால்
> தானமிழ்தம் என்றுணரற் பாற்று,

இங்கு, 'உலகம் வழங்கி வருதல்' என்னும் சொல்லாட்சி நம் சிந்தனையைப் பெரிதும் தூண்டுகின்றது. இம்மாபெரும் உலகின் கண்ணே வழி வழியாகத் தோன்றி, இயங்கிவரும் மக்கள் கூட்டத்தின் இடையறாத பேரியக்கம்— என்றும் நடைபெறும் உயிரியக்கம் என்னும் பொருளில் இத்தொடர் திருவள்ளுவரால் வழங்கப்பட்டுள்ளது. மழையை ஓர் இயற்கைக் கண்ணோட்டம் கொண்டு மட்டும் நோக்காமல், ஒரு பெரிய சமுதாயக் கண்ணோட்டத்தோடும் திருவள்ளுவர் நோக்குகின்றார். சமுதாயத்தின் மொத்தச் செயற்பாட்டில் மழைக்குரிய இன்றிமையாப் பேரிடத்தைக் குறளாசிரியர் நன்கு வலியுறுத்துகின்றார். மழையில்லை என்றால் உண்பதற்கு உணவில்லை; உழவுத் தொழில் இல்லை ; பசும் புல்லும் இல்லை; நெடுங்கடலின் வளமும் இல்லை என்று சொல்லிவரும் ஆசிரியர்,

> சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
> வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

என்கின்றார். மக்கள் கூட்டமாகக் கூடிநின்று நடத்தும் விழாவும் பூசனையும் நடவா என்பதினால் மழையில்லாமல் மாறிவிடக்கூடும் சமுதாயத்தின் மொத்தப் போக்கினையே சுட்டிக் காட்டும் திருவள்ளுவர், சமுதாயச் செயற்பாட்டில் மழைக்குரிய பாங்கினை வேறு எவரும் காட்டாவண்ணம் காட்டி, தம் முன்மைத்திறத்தைப் புலப்படுத்துகின்றார். இவ்வகையில் நோக்கும்போது வள்ளுவர் ஒரு பொருள்முதல் வாதியாகவும் விளங்கு கின்றார் என ஊகித்தறியலாம்.

3. இல்லற வாழ்க்கை, துறவற வாழ்க்கை ஆகிய இரண்டையும் ஒப்பிட்டு நோக்கி, ஒவ்வொன்றன் தன்மைகளையும் போக்குகளையும் அறிந்து தெளிந்த ஆசிரியர், எல்லாம் துறந்து மனிதக் கூட்டத்தைவிட்டு விலகி யிருக்கும் தவத்தோரினும் இல்வாழ்பவரே நோன்மை மிக உடையார் என்பதனை, 'இல்வாழ்க்கை' அதிகாரத்தில்,

ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து.

என்றும் குறளால் புலப்படுத்துகின்றார்.

4. இன்று நம்மிடையே வாழும் சிலர் நம் முன்னோர் அறிவு மிக்கவராக விளங்கினர் என்றும் நாம் அறிவு குறைந்து இருக்கின்றோம் என்றும் வருந்துவது உண்டு. இத்தகைய குறைபாட்டிற்கு இடமில்லை என்பது 'மக்கட்பேறு' என்ற அதிகாரத்தினால் நாம் உணரலாம்.

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

என்ற குறளால் நம்மினும் நம் மக்கள் அறிவுடையராக விளங்குவர் என்ற கருத்தை உணர்த்துகின்றார் ஆசிரியர்.

இக்கருத்து ஒரு தலைமுறையினருக்கு மட்டுமன்றி ஒவ்வொரு கால கட்டத்திலும் வாழும் ஒவ்வொரு தலைமுறையினருக்கும் பொருந்துவதாகும். குறிப்பிட்ட ஒரு தலைமுறைமக்கள் அறிவுடையவராக விளங்க, அவர்க்கு அடுத்தடுத்து வரும் தலைமுறையினரும்தம் முன்னைய தலைமுறையினரை விட அறிவாற்றல் மிக்கவராக விளங்குவர் என்ற உண்மை புலனாகின்றது. அறிவு முறையில் தோன்றும் தலைமுறை இடைவெளி (Generation gap) என்பது இல்லை என்னும் கருத்தும் தலைமுறைதோறும் அறிவாற்றல் கூடிக்கொண்டே செல்கின்றது என்னும் கருத்தும் திருவள்ளுவரின் முன்மைத்திறத்திற்கு தனி சிறந்த சான்றுகளாகின்றன. ஒரு வகையில், அறிவுப்பரிணாம வளர்ச்சியில் திருவள்ளுவர்க்குள்ள ஓர் அரிய ஆக்கமான சிந்தனைப் புதுமையை ஈண்டு நாம் காணமுடிகின்றது.

5. மனிதர்கள் நாள்தோறும் ஒருவரோடொருவர் கலந்து இயங்கும் இயக்கத்தில் பேச்சு என்பது ஓர் உயிர்க் கூறாக அமைகின்றது. திருவள்ளுவர் பயனில சொல்லாமை என்னும் அதிகாரம் வாயிலாகத் தமிழிலக்கிய உலகில் வேறு எவரும் சொல்லாத அளவிற்கு, பயனற்ற பேச்சினை முற்றும் கடிந்து ஒதுக்குதல் குறித்து மிகமிக விரிவாகப் பேசுகின்றார். பேசும் சொல்லனைத்தும் பொருளுடையனவாக விளங்கவேண்டும் என்றும் பயனில்லாத சொற்களைச் சொல்லுவான் எல்லாரும் எள்ளும் நிலையை அடைவான் என்றும் பயனற்ற சொற்களைச் சொல்வது நயமற்ற செயல்களைச் செய்வதினும் கொடிது என்றும் பயனில சொல்வாரை விட்டுச் சீர்மையும் சிறப்பும் நீங்கும் என்றும் பயனில சொல்வானை 'மகன் என்னாது மக்கட் பதடி' என்றே கூறவேண்டும் என்றும் அறிவுடையார் அரும் பயன் ஆயும் அறிஞர் பெரும்பயன் இல்லாத சொற்களைச் சொல்லார் என்றும் பிறவாறும் உரைக்கும் கருத்துக்கள் புதுமை உடையனவாக விளங்குவதோடு திருவள்ளுவருக்குரிய ஓர் அடிப்படைப் பண்பையே

வெளிப்படுத்துவனவாகவும் உள்ளன. உலகம் முழுதும் போற்றும் மாமறையாம் திருக்குறளை வழங்கிய திருவள்ளுவரே, 'பயனில சொல்லாமை'யை ஒரு மாபெரும் வாழ்க்கை நெறியாகக் கொண்டு வாழ்ந்துள்ளார் என்றும், அதனாலேயே அரும்பயன் ஆயும் அவ்வறிவினர் குறள் வெண்பாவையே பெரும்பயன் விளையும்வண்ணம் பயன்படுத்தியுள்ளார் என்றும் கொள்ளலா மன்றோ!

## 6. தீவினையச்சம் :

பாலைவழியில் தனித்துச் செல்வாரிடம் ஆறலைகள்வர் வலியச்சென்று பொருளைப் பறித்தனர் என்ற குறிப்பு சங்க இலக்கியங்களில் இடம் பெறுகின்றது. சங்க காலத்திற்கு முற்பட்ட திருவள்ளுவரோ பொருளின்மையால் இல்லறத்தவரோ, ஆறலைகள்வரோ தீவினையில் ஈடுபடுதலை முற்றும் கடிகின்றார். பொருளின்மையால் மக்கள் தீவினையில் ஈடுபடுதலைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்ற நிலையினின்றும் முற்றும் வேறுபட்டு, பொருளின்மை முதலிய எக்காரணம் கொண்டும் தீவினை செய்தல் ஆகாது என்பதனைத் தம் தெளிந்த சிந்தனையால் திருவள்ளுவர் தெளிவு படுத்துகின்றார். பொருளின்மை என்பது எக்காலத்திலும் மனிதனைத் தீவினை செய்யும்படி தூண்டக்கூடும். ஆதலின் மிகப்பழங் காலத்திலேயே 'தீவினையச்சம்' என்ற அதிகாரத்தின் வாயிலாக ஓர் எச்சரிக்கையினை விடுத்திருப்பது அவரது முன்மைத்திறத்தைப் புலப்படுத்துகின்றது. தீவினை பலவாக இருக்க, பொருள் காரணமாக நேரக்கூடும் தீவினையைத் திருவள்ளுவர் சுட்டிக்காட்டிக் கடிவது குறிப்பிடத்தக்கது.

> இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
> இலனாகும் மற்றும் பெயர்த்து.

## 7. ஒப்புரவறிதல் :

தனிமனிதன் தன்பொருளுடைமைகளை மட்டுமன்றி அனைத்துவகை உடைமைகளையும் சமுதாயத்தின் பொதுநலனுக்கு உரியவாக்கி அனைவருக்கும் பொதுமையாக்கி வாழும் பெருநெறியை 'ஒப்புரவறிதல்' என்னும் அதிகாரத்தில் விளக்குகின்றார். ஆசிரியர் தனிமனித உடைமைகள் சமுதாயப் பொது நலனுக்குப் பயன்படும் நிலைகளை மிக நுட்பமாக விளக்கியுள்ளார்.

> ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
> பேரறி வாளன் திரு.
> பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
> நயனுடை யான்கட் படின்.
> மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
> பெருந்தகை யான்கட் படின்.

என்னும் குறள்களில் உவமைகளின் துணைகொண்டே ஒப்புரவின் வகைகளை வள்ளுவர் விளக்கியுள்ளமை, அவருடைய தன்னேரிலாச் சிந்தனைத் திறத்தை, அச்சிந்தனையின் கண்ணே ஒளிரும் முன்மைத்திறத்தை நமக்குத் தெளிவுறப் புலப்படுத்துகின்றது.

## முடிவுரை :

முன்மைத்திறம் என்பது ஒருவரின் மிகமிக ஆழமான சிந்தனையோடு ஒட்டிய, எதைக் குறித்தும் புதுமையாகச் சிந்தித்துக் காட்டும் வித்தகத் தோடு இயைபுடைய ஒரு முக்கிய அறிவாற்றல் திறனாகும். ஒருவர் படைத்த இலக்கியத்தில் முன்மைத்திறம் மிகுதியாக விளங்க விளங்க அவ்விலக்கியத்திற்குரிய சிறப்பு பன்மடங்கு கூடுகின்றது. வழிவழியாக வரும் மக்களினம், குறிப்பாக இலக்கியச் சுவைஞர், படைப்பிலக்கியத்தில் முன்மைத்திறம் காரணமாக விளங்கும் புதுமைக் கருத்துக்களையும் புதிய நயங்களையும் கண்டு, சுவைத்து, மகிழ்ந்து படைப்பாளர் மேற்கொண்டுள்ள மரபு முறைகளை ஒரு பக்கம் போற்றி, மரபுகளுக்கு அப்பாற்பட்டு அல்லது மரபுகளை மீறி அப்படைப்பாளர் தாமே புதியனவாகப் படைத்துக் காட்டும் கூறுகளை மறுபக்கம் போற்றுகின்றனர். இலக்கியக் கலைஞரின் படைப்புக்கள் ஏனையோரின் படைப்புக்களினின்றும் ஏதேனும் ஒரு வகையில் அல்லது சிலவகைகளில் வேறுபட்டிருக்கும். இந்நிலையில், ஒரு குறிப்பிட்ட இலக்கியப்படைப்பில் மற்றவற்றில் காணாத சில தனிக்கூறுகளை அல்லது புதுமைகளைக் கற்போர் காண்பர். இடங்கடந்தும் காலங்கடந்தும் வழி வழியாய் வந்துள்ள மக்களுக்குத் திருக்குறள் என்னும் வற்றாப் பேரிலக்கியம் பொருள் வகையில் என்றென்றும் ஊற்றம் மிக்கதாக விளங்கியுள்ளது. மனிதவாழ்க்கை என்பது என்றும் உள்ளது. இவ்வாழ்க்கையை முழுமை யாகவும் சுவையாகவும் மிகமிகத் திறம்படவும் காட்டும் வள்ளுவர் முன்மைத் திறம் மிக்கவர் என்று நம்மால் போற்றுதற்குரியவராவார். அத்திரு வள்ளுவர் வழங்கிய திருக்குறள் என்னும் நூலினின்றும் அவர்தம் ஆளுமையைப் (Personality) பிரிக்கவியலாது. அவ்வாளுமையோடு இரண்டறக் கலந்துள்ள முன்மைத்திறனைக் காண்பதற்கு இலக்கிய ஆராய்ச்சியாளரின் உண்மைத்திறம் இன்றியமையாதது. இம்முறை மேற் கொண்டே பொருள்வகையில் திருவள்ளுவரிடம் அமைந்திருந்த முன்மைத் திறம் இதுகாறும் அறத்துப்பாலில் ‘இல்லறவியல்’ முடிய உள்ள சில குறள்களின் துணைகொண்டு கட்டுரையாளரால் விளக்கப்பட்டது.

## குறிப்புகள்

1. John Erskine, The Literary Discipline, Eveleigh Nash and graysm Ltd., London, 1927, pp. 71-72.

2. டாக்டர் சு. பாலச்சந்திரன், இலக்கிய இயக்கங்களும் திறனாய்வும், கோமதி நூலகம், சென்னை-41, முதற்பதிப்பு, 1982, பக். 83-84.

3. Princeton Encyclopaedia of Poetry and Poetics Ed., by Alen Preminger, Princeton University Press, 1972, p. 594.

4. திருக்குறள்–ஆராய்ச்சிப்பதிப்பு கி. வா. ஜகந்நாதன், ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோவை, 1963, திருவள்ளுவமாலை, வெண்பா. 33

5. ,, ,, ,, வெண்பா. 29.

6. ,, ,, ,, ,, 3.

7. ,, ,, ,, ,, 9.

8. ,, ,, ,, ,, 5.

9. ,, ,, ,, ,, 31.

10. பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், சென்னை-13, 1978, பக். 46, தமிழ்—பா: 2.

# சமுதாய நோக்கில் தமிழ்த் திரைப்படங்கள்

டாக்டர் ப. கிருஷ்ணன்

0. 1. திரைக்கலை ஒரு வாழும் கலை; இக்கலைக்கு முன்னோடிகளாகத் திகழும் கூத்து, நாடகம், நாட்டியம் போன்ற கலைகளைவிட இக்கலை அறிவியல் கருவிகளின் துணையோடு வளர்ந்து வருகிறது. இதன் காரணமாகவே திரைப்படம் நிழற்படமாக இருப்பினும் உயிருள்ள படமாகத் திகழ்கிறது; உயிர்க் கலையாக மாறுகிறது.

0. 2. இலக்கியத்தின் சுவைகளும் உத்திகளும் மொழி வாயிலாக வெளிப்படுகின்றன. திரைப்படத்தின் சுவைகளும், உத்திகளும் காட்சிகள் வாயிலாக வெளிப்படுகின்றன. மற்றபடி உள்ளடக்கம், உருவம், உத்திமுறைகள் ஆகியன இரண்டிற்கும் பொதுவானவை. எனவே இலக்கிய ஆய்வுக்கு நாம் பயன்படுத்தும் பல ஆய்வுக் கூறுகள் திரைப்பட ஆய்வுக்கும் பொருந்தும். கதைக்கரு, கதையின் தன்மை, கட்டுக்கோப்பு, வெளிப்பாடு போன்ற அக அமைப்புகளையும், சமூகப்பயன் அதன் எதிர் விளைவுகள் போன்ற புற அமைப்புகளையும் இலக்கியம் நாடகம் ஆகியவற்றில் ஆய்வதைப் போலவே திரைப்படங்களிலும் ஆராயலாம். காரணம் அக்கலைகளைப்போலவே இதுவும் மனிதர்களுக்காக மனிதர்களைப் பற்றி மனிதர்கள் படைக்கின்ற கலையேயாகும்.

0. 3. கலைகளுக்கும் சமுதாயத்திற்கும் இடையே உள்ள தொடர்பைப்பற்றி அறிஞர்கள் பலகாலமாக எண்ணி வந்திருக்கின்றனர்—எண்ணி வருகின்றனர். ஓர் இலட்சிய சமுதாயத்தை அமைப்பதற்குக் கலைகளின் பங்கு எந்த அளவு இருக்க வேண்டும் என்பதைப்பற்றி பிளாட்டோ தம் குடியரசு என்ற நூலில் கூறுகிறார். கலைகள் சமுதாயத்திற்குப் பயன்பட வேண்டுமாயின், சமூகத்தின் பல கூறுகளும் கலைகளின் கருப்பொருளாக இடம்பெற வேண்டும். சமூகத்திற்குப் பயன்படாத அல்லது கலைஞனின் சுயதாகத்தைத் தணித்துக்கொள்ளும் கற்பனைகள் கலைகளில் மிகுதிப்படுமாயின் கலைகளுக்கும் சமூகத்துக்கும் இடையே ஏற்படும் இடைவெளி இணைக்கமுடியாததாகிவிடும்.

0. 3. 1. கலைகளின் சமூக நோக்கத்தை இவ்வளவு வலியுறுத்திக் கூறுவதால் கலைகளோ, கலைஞர்களோ ஒரு சமூகத்திற்குரிய மருந்தாகவோ மருத்துவர்களாகவோ இருக்கின்றனர் என்பது பொருளில்லை. உணர்ச்சிகளுக்குக் கட்டுப்பட்டு அல்லது உணர்ச்சிகளின் அடிப்படையில் இவை உண்மையை அணுகும் தன்மையுடையனவாதலின் இவற்றில் ஓர் ஒழுங்கும் கட்டுப்பாடும் வேண்டும் என்ற பொருளிலேயே இக்கருத்து கூறப்படுகிறது. இந்த அடிப்படையில் தமிழ்த் திரைப்படங்களைப் பற்றி இனி ஆராய்வோம்.

1. 1. தமிழ்த் திரைப்படங்களின் ஐம்பதாண்டுக்கால வரலாற்றைப் பின்வருமாறு வகை செய்து கொள்ளலாம். 1. பாடல்களின், புராணக் கதைகளின் செல்வாக்கு மிகுந்த தொடக்க காலம். 2. உரையாடல்களின் செல்வாக்கு மிகுந்த இடைக்காலம். 3. கதாநாயகர்களின் செல்வாக்கு மிகுந்த பிற்காலம். 4. தொழில் நுட்பக் கலைஞர்களின் செல்வாக்கு மிகுந்த தற்காலம் என வகை செய்யலாம். இவற்றுள் முதல் மூன்று காலகட்டங்களையும் பேசும் படத்துக்குரியனவாகவும் (Talkie) நான்காவது காலகட்டத்தைப் பார்க்கும் / நகரும் (Movie) படத்துக்குரியதாகவும் கொள்ளலாம். தமிழ்த்திரைப்படம் பேசும்படமாக இருந்த காலம் வரையில் கதையில் —அதன் உரையாடலில் அழுத்தமும், பார்க்கும் படமாக இருந்த காலத்தில் காட்சியில் அழுத்தமும் ஏற்பட்டிருப்பதைத் திரைப்படச் சுவைஞர்கள் உணரமுடியும். இது ஒரு பறவைக் கண்ணோட்டம்.

1. 1. 1. உரையாடல்களின் செல்வாக்கு மிகுந்த இடைக்காலத்தை மட்டும் அதன் பொருண்மை கருதிச் சிறிது ஆழ்ந்து நோக்கலாம். இளங்கோவனின் திரையுலக நுழைவால், அதுவரை பாடல்களே செல்வாக்குப் பெற்றிருந்த திரைப்படம் உரையாடலின் பக்கம் செவிமடுத்தது. மின்வெட்டுப்போல் தெறித்துவிழும் எழுத்துகளால் சுவைஞர்களின் கவனத்தை உரையாடலின் பக்கம் திருப்பியவர் இளங்கோவன் ஆவார். இருப்பினும் இவருடைய காலகட்டக் கதையமைப்பின் காரணமாக இவர் உரையாடல் சமுதாயப் பார்வையை மிகுதியும் பெறவில்லை எனலாம். இவரையடுத்து அறிஞர் அண்ணாவும் பின் கலைஞர் கருணாநிதியும் தத்தம் வன்மை மிக்க எழுத்துகளால் அந்தக் காலகட்டத் திரைப்பட வரலாற்றுக்குப் பெருமை சேர்த்தனர். குறிப்பாக அண்ணாவின் முற்போக்கான கருத்துகள் முழுவேகத்துடன் திரையுலகில் செல்வாக்கு செலுத்திய இககாலம் திரையுலகிற்குப் பொற்காலம். இவருடைய எழுத்தைப் படித்து எழுதக் கற்றுக்கொண்டோர் பலர். அண்ணா அமைத்துத்

தந்த பாதையில் வெற்றிநடை போட்டுச் சென்றவர் கலைஞர் கருணாநிதியாவார். இவ்விருவரும் உரையாடல்களை மட்டுமின்றிக் கதைகளையும் தாங்களே எழுதினர். அவர்களின் பெரும்பாலான எழுத்துக்கள் சமூக விகாரங்களை நுட்பமாகப் படம்பிடித்துக்காட்டும் சொல்லோவியங்கள் ஆயின.

1. 1. 1. 1. எழுத்தாளர்கள் தோன்றிய சமுதாயம், அவர்களின் சமூகக் கட்டுப்பாடு ஆகியவற்றை நுட்பமாகக் கண்டு அவர்களின் படைப்பிற்கு அவற்றைக் காரணமாகக் காட்டும் புறச்சார்புக் கலையாய்வு மேலை நாடுகளில் வளர்ந்து வருகிறது. இதை நாம் ஒருசில கோணங்களில் ஏற்றுக்கொள்ளலாம். அண்ணாவும், கலைஞர் கருணாநிதியும் அவர்கள் சார்ந்திருந்த அரசியல் இயக்கங்களின் காரணமாகவும், மேற்கொண்டொழுகிய அரசியல் கொள்கைகளின் காரணமாகவுமே மிகவும் வலுவாகச் சமுதாயப் பார்வையில் எழுதினர் என்று முடிவுகட்டினரால் அது மறுப்புக்குள்ளாகாது. அவர்களின் ஒவ்வொரு கதையும், ஒவ்வொரு உரையாடலும் ஆளுவோரை, செல்வந்தரை, மேட்டுக்குடி மனப்பான்மை கொண்டவர்களை வெளிப்படையாகக் கிண்டல் செய்பவை.

1. 2. இவர்கள் காட்சிப்படுத்திக்காட்டிய சமுதாயச் சித்திரம் ஒரு வகையானது. இவர்கள் அரசியல்வாதிகளாக நின்று திரைக் கலையைப் பார்த்தார்களேயன்றிக் கலைஞர்களாக நின்று பார்க்கவில்லை. இதன் காரணமாகவே இவர்களின் பாத்திரப்படைப்பு எத்தன்மையுடையதாயிருப்பினும் அதில் அரசியல் நெடிமிகுதியாக இருந்தது. இன்னொரு வகையில் கூறின் இவர்கள் திரைக்கலையைத் தம் கொள்கையை அரங்கேற்றுவதற்குரிய சரியான களமாகக் கொண்டு வெற்றி கண்டனர் எனலாம். இருப்பினும் கலைத்தன்மை கெட்டுவிடாமல் அதையும் வளர்த்துத் தம் கொள்கையையும் வளர்த்தது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. வியாபாரிகளாக நின்று வியாபார நோக்கில் திரைப்படத் தொழிலை அணுகும் இன்றைய இழிந்த நோக்கைவிட இது பன்மடங்கு உயர்ந்தது என்று கூறலாம்.

1. 3. உண்மையான சமுதாய நோக்குடைய திரைப்படங்கள் எவ்வாறு இருக்க வேண்டும்? திரைப்படங்களில் காட்டப்பெறும் சமுதாயம் நடைமுறை வாழ்வின் சாயல் பெற்றதாகத் திகழவேண்டும். இவ்வாறு திகழவேண்டுமாயின் ஒரு படைப்பாளன் வெறும் கலைஞனாக மட்டுமின்றிச் சமுதாய நிலைகளை நன்கு உணர்ந்திருக்கும் சமூகவியலாளனாகவும் இருக்கவேண்டும். குறைந்த அளவு, சமூகச்

சிக்கல்களைப் பரிவுணர்வோடு நோக்கும் உள்ளமுடையவனாகப் படைப்பாளன் விளங்கவேண்டும். ஒரு சமூகத்தை-அதன் எண்ணச் சுழற்சிகளை நேரடியாகவோ எதிர்மறையாகவோ அலசிப்பார்க்கும் விதத்தில் ஒரு திரைப்படம் அமையவேண்டும். வெறும் பொழுது போக்குக்கே திரைப்படம் என்னும் நிலையை விடுத்து ஏதேனும் ஒரு குறிக்கோளுடன் படம் எடுக்கவேண்டும்.

1. 3. 1. படைப்பில் பொதிந்து கிடக்கும் குறிக்கோளைப் பற்றிய விவாதம் இலக்கிய ஆய்விலும் நடைபெறுவதுண்டு. சமுதா யத்தை-அதன் சிக்கல்களை நேரடியாகக் காணக் கூச்சப்படும் கலைஞர்கள் சமுதாயத்திற்கும் தமக்கும் ஒரு பெரிய இடைவெளியை ஏற்படுத்திக்கொண்டு தம் கற்பனையில் உருவாகும் பொய்ம்மை மிகுந்ததொரு சமுதாயத்தைத் தம் கலைகளில் படைத்துக்கொள் கின்றனர். இவை ஆய்வு நிலைக்கு வரும்பொழுது 'கலை கலைக் காகவே' என்று கூறித் தம்மைச் சிக்கலினின்றும் விடுவித்துக் கொள்ள முற்படுகின்றனர். கலை அதற்கென்று ஓர் உருவத்தையும் உள்ளடக்கத்தையும் குறிக்கோளையும் பெற்றிருககிறது என்றும் அது சமூகத்தின் பிரச்சாரக் கருவி அன்று என்றும் மொழிகின்றனர். இது பொய்யான அல்லது எளிமையாகத் தப்பித்துக்கொள்ளுவதற் குரிய வாதமும் வழியுமாகும். ஒருவேளை இக்கூற்று இலக்கியக் கலைக்குப்பொருந்துமாயினும் திரைக்கலைக்கு அறவே பொருந்தாது. ஏனெனில் இலக்கியப் படைப்பாளர்களால் பொதுமக்கள் இழக்கக் கூடிய பொருட்செல்வம் ஏதுமில்லை. ஆயின் திரைப்படத்திற் காகப் பொதுமக்கள் இழக்கும் அல்லது தயாரிப்பாளர்கள் பெறும் செல்வம் பலகோடியாகும். பொருளாதாரத்தோடு நேரடியான தொடர்புகொண்ட புதுமையானகலை திரைக்கலையாகும். இரண் டாவது, உண்மையான சமுதாய உறுப்பினர்களைப் போலவே திரைப் படங்களில் நிழல் வடிவில் பல சமுதாய உறுப்பினர்கள் நடமாடிக் கொண்டிருக்கின்றனர். திரைப்படச் சமுதாயம் உண்மைச் சமுதா யத்தோடு இணைந்து அல்லது ஒன்றிச்செல்லாதபோது இரட்டைச் சமுதாயம் ஏற்படுகிறது. இதனால் உண்மைச் சமுதாய உறுப்பி னர்கள் பொய்ம்மை மிகுந்த திரை உறுப்பினர்களைப் பார்த்துப் பார்த்துக் கற்பனை வாழ்வு வாழத் தொடங்கி விடுகின்றனர். ஆகவே உண்மையின் நடைமுறையின் பின்னணியில் கலையாக்கம் நிகழும்போது பொய்ம்மைகள் வலுவிழந்து விடுகின்றன.

**1. 4.** திரைப்படப் பாத்திரப் படைப்புத் தொடர்பாகக் குறிப்பிடத் தக்க இன்னொரு செய்தியை அறியவேண்டும். குறிப்பாகக் கதைத் தலைவர், தலைவியரின் பாத்திரப் படைப்பு கூரிய நோக்கிற்குரியது. சமூகச் சீர்திருத்தக்காரராகவோ, ஏழைகட்குச் செல்வத்தை வாரி வழங்கி ஏழ்மையை விரட்டும் வள்ளலாகவோ, சமூகக் கொடுமைகளை தனியொருவராகவே எதிர்த்து நின்று அழிக்கும் ஜாம்பவானாகவோ தலைமைப் பாத்திரம் அமைவதுண்டு. சமூக நண்பனாக மட்டுமின்றிச் சமூக விரோதிபோல் படைக்கப்படும் தலைமைப் பாத்திரங்கள் கூடச் சமூக நன்மையைக் கருதியே அவ்வாறு படைக்கப்படுகின்றன என்று உணர்த்துவதைப்போல் திரைப்படங்களில் காட்டப்படுகின்றன. இத்தகைய பாத்திரப் படைப்புகள் அனைத்தும் நடைமுறைச் சமூகத்தோடு ஒத்து வராதனவாகும்.

**1. 4. 1.** ஒரு சமூகத்தைத் திருத்தக் கூடிய நெறிப்படுத்தக் கூடிய ஆற்றலில் திரைக்கலையின் பங்கு மிகக்குறைந்த அளவினதே. ஆயின், குறிக்கோளற்றுப் பொழுது போக்குக்கென்றே தயாரிக்கப் படும் திரைப்படங்களால் ஒரு சமூகம் சிந்தனையற்றுப்போவதற்கு நிறைய வாய்ப்புகள் உண்டு. உண்மைச் சமூகத்தில் காணும் உண்மைச் சிக்கல்களைச் சந்திக்கத் திறனற்றோரும் பயம் கொள்வோரும் தற்காலிக விடுதலையாக எண்ணிச் சிலமணிநேரங்களைத் திரைப்படம் பார்ப்பதில் கழித்து விடுகின்றனர். சாமானிய மக்களைப் பற்றிச் சொல்லவேண்டுவதே இல்லை. ஒரு சமூகத்திடையே இத்தகையபோக்கு தொடர்கதையாகும் பொழுது முற்றிலும் போலியான உணர்வுகளில் அது தன்னைத்தானே பிணித்துக்கொள்கிறது. ஆக, சமூகச் சிக்கல்கள் அவற்றின் மேனி குலையாமல் அப்படியே இருக்கின்றன. மனிதர்கள் மட்டும் தப்பிச்செல்கின்றனர்.

**1. 5.** இவ்வாறு சொல்வதால் திரைப்படங்கள் தீவிரமாகச் சமூகப் பிரச்சாரம் செய்யவேண்டும் என்பது பொருளன்று. நீதி போதனை செய்வதோ பிறவோ அவற்றின் பணியுமில்லை. சமூகச் சிக்கல்களுக்கும், நடைமுறைகளுக்கும் கலைநோக்கோடு (அது அடிப்படையில் ஒரு கலையாக இருப்பதால்) சரியான வடிவம் தருவதே அவற்றின் முதன்மைப் பணியாகும்; அதுவே சமூகம் பெறுகின்ற பயனுமாகும். இவ்விடத்தில் கலையின் அழகியல் பற்றிய வினா எழுதல் இயல்பு.

**1. 5. 1.** 'கலையின் உறுப்புகள் எவையாயினும் இவற்றின் நடவடிக்கைகளும் போக்குகளும் உலக நடைமுறைகளோடு ஒத்து வருகின்றனவா என்பதை அறிந்தே மேலைநாட்டுக் கலைஞர்கள் கலைக்கு வடிவம் தருகின்றனர். இந்தியக் கலைஞர்கள் தாம் எண்ணியிருக்கும் உருவத்துக்கு உகந்து உறுப்புகள் அமைய வேண்டும் என்பதில் கவனம் செலுத்துகின்றனர்' என்று பேராசிரியர் திருஞான சம்பந்தம் தம் 'இந்திய எழிற்கலை' என்னும் நூலில் கூறுகிறார் (பக்கம் 2). இந்திய அழகியலில், அதை உருவாக்கும் முறைகளில் தத்துவநோக்கம் காணப்படுவதையும் மேனாட்டு அழகியலில் நடைமுறைக் கூறுகள் சிறப்படைவதையும் மேற்சுட்டிய விளக்கம் உணர்த்துகிறது. சமூக நடைமுறைகள் கலையில் அழகு பெறுவதும் அழகியலாக மாறுவதுமே இன்றைய தேவையாகும். எனவே ஒருகலைஞனின் கற்பனையும் உணர்ச்சியின் உந்துதலும் பருப்பொருளான உண்மைகளை ஒட்டி அமைவதே சாலச் சிறந்தது. தேசத் தந்தை மகாத்மா காந்தி கூறுவதைப்போல், ஒரு கலை, அதன் அமைப்பு, நோக்கம் போன்றவை மறைபொருளாகவன்றிச் சாமானியனும் புரிந்துகொள்ளும் விதத்தில் வெளிப்படையாக அமைந்திருத்தல வேண்டும். ஏனைய கலைகளை விடத் திரைக் கலை வாயிலாக இதை எளிதாக நிறைவேற்ற முடியும்.

**1. 6.** இங்கு விவரித்த அழகும் அழகியலும் தமிழ்க் கலைகளில் குறிப்பாகத் திரைக்கலையில் எந்த அளவு இருக்கிறது? உறவு பிரிவு, நட்பு, பகை போன்ற கதைக் கருக்களும், குடும்பம், சமுதாயம் போன்ற கதைக் களங்களும் தமிழ்த் திரைப்படங்களில் வருவது உண்மை. ஆனால் அவற்றை நேரிய கலைநோக்கோடு நம் படைப்பாளர்கள் எந்த அளவு படைத்திருக்கிறனர்? எங்குத் தொடங்குகிறோம் எங்கு முடிக்கிறோம் என்ற இலட்சியமே இல்லாமல் எடுக்கப்பட்ட திரைப்படங்களே மிகுதியாக இருக்கின்றன. உயரிய கலைநோக்கோடு அமைந்த படம் நூற்றுக்கு ஒன்றேனும் இருக்கிறது என்று விரல் நீட்டிக் கூறும் துணிச்சல் நம் கைகளுக்கு இல்லை. இந்த அவலநிலை எதனால் ஏற்பட்டிருக்கிறது? யார் இதற்குக் காரணம்?

**1. 6. 1.** திரைப்படக் கதாசிரியர், இயக்குநர், கதாநாயகர், தயாரிப்பாளர், வெளியிடுவோர் என்ற வரிசையில் தமிழ்ப்படங்களின் தரம் குறைவதை நுணிகிப்பார்ப்போர் அறிவர்.

1.6.1.1. தமிழ்த் திரைப்படக் கதாசிரியர்களின் கதைக் களம் மிகமிகச் சுருங்கியது. 80 விழுக்காடு கதைகள் காதற் சார்புடையன. கதை எழுதுகின்றவர்களும் கதைச் சூழல், பின்னணி, இவற்றிற்கேற்ற கதைவளர்ச்சி என்று எண்ணி எழுதாமல் திரைப் படக் காட்சிகளை மனத்துட்கொண்டே அவற்றிற்கேற்றவாறு கதையை எழுதுகின்றனர். இதன் விளைவு? புதுமையாக அவர்களால் சிந்திக்க இயலாமல் போய் விடுகிறது. புதுமையாகச் சிந்தித்தாலும் தமிழ்த்திரைப் படங்களுக்கென்று இருக்கும் சில வாய்பாடுகளுக்குள் அவை விழுந்து உடைபட்டுப்போய் விடுகின்றன. இவை எல்லாவற்றையும் மீறி மிகப்புதுமையாகக் கதையை உருவாக்கும் பொழுது அக்கதை இயக்குநர் உள்ளத்தில் மதிப்பை இழந்து விடுகிறது.

1.6.1.2. தமிழ்த்திரைப்பட இயக்குநர்கள் குறிப்பிட்ட எல்லைகளுக்குள்ளேயே சுற்றி வருவதில் இன்பம் காண்பவர். ஒரு கருத்தை உருவக வாயிலாகவோ வேறு உத்திகளைக் கொண்டோ புதுமையாகக் காட்டியிருப்பாராயின் அது பெரும்பாலும் மேனாட்டுப் படங்களின் தழுவலாக இருக்கும். திரையுலகில் ஸ்ரீதரின் யுகம் தொடங்கும் வரை தமிழ்த்திரைப்பட உத்திகள் பாவைக்கூத்து உத்திகளாகவே இருந்துவந்தன. (உத்திகளில் சிலபல குறைபாடுகள் இருப்பினும் வேறுசில வகைகளில் பழைய தமிழ்ப்படங்கள் சிறப்புப் பெற்றிருந்ததையும் மறக்கமுடியாது.) ஸ்ரீதரும் அவருக்குப்பின் வந்த இயக்குநர்களும் உத்தி முறைகளில் சில புதுமையைக் காட்டிய போதிலும் உள்ளடக்கத்தில் புதுமையைக் காட்டவில்லை. பொது மக்களின் கலையுணர்வு எதை உணர்ந்து எளிதில் மயங்குமோ, எந்த இடத்தில் அவர்களின் மனம் பலவீனப்படுமோ அவற்றை மட்டும் இயக்குநர்கள் தொட்டுக்காட்டினார்கள். மற்றபடி உயர்ந்த நோக்குடனோ, மக்களைச் சிந்திக்கச் செய்ய வேண்டும் என்ற வேட்கையுடனோ அவர்கள் தங்கள் உத்திமுறைகளைக் கையாளவில்லை. புதுமையைக் கையாண்டு பழகப்படாத காரணத்தினாலேயே கதாசிரியர்களின் புதுமையான கதைகளையும் எளிதில் புறக்கணித்து விடுகின்றனர். கதை நிகழ்ச்சிகளைக் காட்சிப்படுத்துவதில் உள்ள கடினம், அந்தக்கதைக்குத் தகுந்த உருவம் தருவதில் உள்ள சுமை போன்றவற்றை எண்ணிப் புதுமைக் கதைகளை அவர்கள் தேர்ந்தெடுக்க விரும்புவதில்லை. ஒரு வீமத் துணிச்சலை, அவர்களின் உள்ளம் பெற்றுப் பொருள் பொதிந்த கதையை அவர்கள் தேர்ந்து கொண்டாலும் அது தயாரிப்பாளரிடம் செலாவணி ஆவதில்லை,

**1.6.1.3.** தயாரிப்பாளரைப் பொறுத்தவரையில் அவருடைய கவலையெல்லாம் படத்தயாரிப்புக்காகப் போட்ட முதலீட்டைத் திரும்பப் பெறவேண்டும் என்பதில் கூட இல்லை; ஒன்று பத்தாக ஆகவேண்டுமே என்பதில்தான் அவருடைய கவலையெல்லாம் இருக்கிறது. வியாபாரப் பொருளுக்கு என்ன மதிப்பையும் மரியாதையையும் அவர் தருகிறாரோ அவற்றையேதான் திரைப் படத்துக்கும் தருகிறார். அவர் விரும்பும் திரைப்பட உத்தியெல்லாம் வணிக உத்தியேயன்றி வேறன்று. மாறிவரும் சமூக நிலைகளோ சாக்கடையாகத் தேங்கிக்கிடக்கும் சமுதாய இழிநிலைகளோ அவருக்கு முதன்மையல்ல. பாமரமக்களிடம் அவை செலாவணி ஆகுமாயின் அவற்றையும் காட்டுவார்; அவற்றிற்கு நேர்மாறான வற்றையும் காட்டுவார். செல்வம் சேருமாயின் அவர் எதையும் செய்வார். கலை என்ற பெயரில் எதையும் செய்யும் இடத்தில் கலைக்கூறுகளைத் தவிர ஏனைய எல்லாம் இருக்கும். கதை ஆசிரியரும், இயக்குநரும் ஒரு கதையின் பொருண்மையையும் அதன் தேவையையும் வியாபார நம்பிக்கையையும் தயாரிப்பாளரிடம் தக்கமுறையில் சொல்லி அவரை ஒப்புக்கொள்ள வைத்துவிட்டாலும் செல்வாக்குமிக்க படக்கதாநாயகரிடம் இம்மூவருமே பெரும்பாலும் தோல்வி காணுகின்றனர்.

**1.6.1.4.** படக்கதாநாயகர்கள் சில குறிப்பிட்ட வேடங் களையே தமக்குரியனவாகத் தேர்ந்து கொண்டு அவற்றின்மூலம் ஒரு தகுதியை மக்களிடம் வளர்த்துக்கொண்டவர்கள். இந்தத் தகுதிக்கு அப்பாற்பட்டு ஒரு பாத்திரப்படைப்பை ஏற்கவேண்டு மாயின் தொழில் பாதிக்குமோ என்று அவர்கள் அஞ்சுகிறார்கள். மிகுதியும் திரைக்கலை பாமரமக்களின் தயவினால் வளரும் கலையா தலால் அப்பாமர மக்களிடம் ஏற்படுத்திக்கொண்ட தகுதியை— தன்னேரில்லாத் தலைமைத்தனத்தை அவர்கள் இழக்கத் தயாராக இல்லை. இவற்றையும் மீறி ஒருவேளை இவாகள் வேறுபட்ட பாத்திரத்தை ஏற்றுக்கொண்டாலும் பாமர மக்கள் அதை ஏற்றுக் கொள்ளத் தாயாராய் இல்லை. நடிப்புத்திறனும் சுவைததிறனும் நம் திரையுலகைச்சார்ந்து வளர்ந்த வரலாறு இது. மேலும் திரைப்பட நடிகர்கள் பலரின் நடிப்பில் கலைநுட்பமும் தொழில் நுட்பமும் வெளிப்படுவதைவிடப் பாமரமக்களை ஈர்க்கும் கவர்ச்சியே மிகுயாக வெளிப்படுகின்றன. ஏற்றுக்கொண்ட பாத்திரங்களுக்கு உயிர்த் தன்மை அளிக்கும் நடிகர்கள் மிகச் சிலரே ஆவர். இத்தனை குறை பாடுகளுக்கிடையே அவர்கள் இலட்சிய நோக்கோடு சில படங்களில்

நடித்து முடித்தாலும் அவை வெளிவருவதில்லை. இவற்றிற்கு அற்ப ஆயுளை ஏற்படுத்தித்தருவதில் முதன்மையாய் நிற்பவர் பட வெளியீட்டாளர் ஆவார்.

1. 6. 1. 5. கோடிக்கணக்கான ரசிகர்களின் சார்பாளர்களைப் போல் திகழ்பவர்கள் இவ்வெளியீட்டாளர்கள் தாம். இவர்களின் விருப்பமும் நோக்கமுமே ஒரு திரைப்படத்தின் வாழ்வைப் பெரும் பாலும் உறுதிப்படுத்தும். ஆக, திரைப்படத்துறை கலையார்வம் மிக்கவர்களின் கைகளில் இருப்பதைவிடப் பொருளார்வம் மிக்கவர் களின் கைகளிலேயே கட்டுப்பட்டுக் கிடக்கிறது எனலாம். இத்தனை கட்டுப்பாடுகளை மீறி ஓர் எழுத்தாளன் திரைப்படத்துறையில் நிமிர்ந்து நிற்கமுடிவதில்லை. எனவே எழுத்தாளனின் இடம் திரைப் படத்துறையில் இன்றும் கடைசியாகவே இருக்கிறது. சமுதாய நோக்குடன் திரைக்கதை எழுதிப் புகழ்பெற்ற கலைஞர் கருணாநிதி கூட இன்று 'மாடி வீட்டு ஏழை'க்காகத்தான் கண்ணீர் வடிக்க முடிகிறது. அவருடைய சிந்தனை திரிந்து விட்டது என்பது இதற்குப் பொருளில்லை; படவுலகில் கலை நோக்குடன் கூடிய குறிக்கோள் இல்லை என்றே கொள்ளல் வேண்டும்.

1. 6. 2. இனித் தமிழ்ப்படங்களின் கதை தொடக்கம் முதல் இன்றுவரை எத்தகைய நோக்கில் வளர்ந்து வந்திருக்கிறது என்பதைச் சிறிது அறியலாம். 1931-இல் இருந்து 1949 வரை 19 ஆண்டுகளில் ஏறக்குறைய 450 படங்கள் தமிழில் வந்திருக் கின்றன. இவற்றில் 90 விழுக்காடு படங்களின் கதைகள் புராண, இதிகாச நாயகர்களின் வரலாற்றை விளக்குவனவும். கடவுள் அவதாரச் சிறப்பினை விளக்குவனவும், மந்திரவாதிகளின் வேடிக்கை களைக் காட்டுவனவுமாக அமைந்துள்ளன. 1949-இன் இறுதியில் அறிஞர் அண்ணாவின் 'வேலைக்காரி' கதை திரைப்படமாக வந்த தற்குப்பின் தமிழ்த்திரைக் கதைகளில் புதுமை மலரத் தொடங்கியது. ஏழைபடும்பாடு, ஓர் இரவு, கைதி, சர்வாதிகாரி, மர்மயோகி, திரும்பிப்பார், சொர்க்கவாசல், மலைக்கள்ளன், மனோகரா, ரங்கோன் ராதா, புதையல் போன்ற சமூகப் பார்வையுள்ள படங்கள் 1950க்கும் 60க்கும் இடைப்பட்ட காலங்களில் வெளிவந்தன. இருப்பினும் இந்தக் காலகட்டமும் பெரும்பாலும் பழைய நிலைகளி லிருந்து மீளவில்லை. 1960க்குப்பின் வந்த தமிழ்த்திரைப்படங்கள் தாம் ஓரளவு சமூகச் சிக்கல்களை ஆழமாகவும் அகலமாகவும் தொட்டுக்காட்டும் விதத்தில் வந்தன. தனிமனித உணர்வுகள்,

தனிமனிதனுக்கும் சமூகத்துக்கும் உள்ள தொடர்பு, குடும்பச் சிக்கல்கள், அரசியல் கேளிக்கைகள் போன்று பல கோணங்களில் படங்கள் வெளிவரத் தொடங்கின. ஆயினும் இவை வியாபார நோக்கோடு வியாபார உத்திகளைப் பின்புலமாகப் பெற்றே வெளி வந்தன. முழுமையாகக் கலை நோக்கோடு நடைமுறை வாழ்க்கை யைக்காட்டும் கதைகளும், படமாக்கும் முயற்சியும், படமாக்கினாலும் ஊக்குவிக்கும் தன்மையும் இன்னும் தொடக்க நிலையில்கூட இல்லை என்றே கூறவேண்டும்.

**1. 6. 3.** தமிழ்த் திரைக்கதைகளில் சமுதாயப் பாங்கும் அதற் கொத்த கலைவடிவமும் குறைந்த அளவில் இருந்த போதிலும் திரைப்பாடல்கள் சமுதாயத்தைப் பிரதிபலித்துக் காட்டுவதில் குறிப் பிட்ட இடத்தைப் பெற்றிருக்கின்றன. சமூகத்தின் வறுமை, ஏழ்மை, ஏக்கம், இயலாமை, அறியாமை, மூட நம்பிக்கை போன்றவற்றையும் மக்கள் பெறவேண்டிய விழிப்புணர்ச்சியையும் தமிழ்க்கவிஞர்கள் மிக அழகாக வெளிப்படுத்திக்காட்டியிருக்கின்றனர். ஈராயிரம் ஆண்டுகட்கு மேற்பட்ட பழமையினையுடைய இலக்கியச் செல் வங்கள், இலக்கியச் சிந்தனைகள் ஆகியன இன்றைய கவிஞர் களுக்குச் சொத்தாக இருப்பதால் அவர்கள் எளிதில் இந்தச் சிறப்பை எட்டிப் பிடிக்க முடிந்திருக்கிறது. ஆனால் இவர்களின் பாடற் கருத்துகளும் மக்களின் உள்ளங்களில் எவ்வித உராய்வையும் இதுவரை ஏற்படுத்த வில்லை. இதற்குத் தக்க காரணங்கள் உண்டு. புற்றீசல்கள் போல் படங்கள் வெளி வருகின்றன. பல்வேறு சுவையில் பல்வேறு மெட்டுகளில் பாடல்கள் புத்துபுதிதாகப் பெருகி வரு கின்றன. ஒரு பாடலை—பாடற்கருத்தை மனத்துட்கொண்டு அசை போடத் தொடங்குவதற்குள் பத்துப் புதிய பாடல்கள் வந்து விடுகின்றன. புதியதைச் சுவைக்க விரும்பும் மனித உள்ளம் ஒன்றிலேயே ஒன்ற மறுக்கிறது; பட்டாம் பூச்சி மனம் கொள்கிறது.

**1. 6. 4.** பொதுவாகத் தமிழ்த்திரைப் படங்களை இறுக்கிப் பிடித்துக் கொண்டிருக்கும் வணிக மனப்பான்மை என்று ஒழியும்? திரைப்படங்களில் ஆழ்ந்த கலைநோக்கு என்று வளரும்? இதற்குக் காலம் சற்று முன்பின் ஆகலாம். ஆனால் இந்தக் குறிக்கோளுக்கு வந்தே தீரவேண்டிய, முடியாவிட்டால் அதனின்றும் வெளியேறக் கூடிய சூழல் வணிகநோக்குடைய இன்றைய படவுலகினர்க்கு உறுதியாக உருவாகும். ஆலிவுட் திரைப்படங்களில் பொதிந்து கிடக்கும் வணிக உத்தியில் ஒரு விழுக்காடுகூட நம் திரைப்படங் களில் இல்லை. அத்தகைய ஆலிவுட் திரைப்படங்களே இன்று

விமர்சனத் தன்மையை இழந்துவிட்டன. திரைப்படங்களில் பல புதிய உத்திகளைப் புகுத்திக்காட்டி உலகம் தழுவி உள்ள இயக்குநர் களுக்கு வாழ வழி செய்தவர் கிரிபித் என்ற ஆலிவுட் இயக்குநர் ஆவார். ஆனாலும் இன்று அவரைப் பற்றிப் பேசுவதைவிட சத்தியஜித்ரேயைப் பற்றிப் பேசும் பேச்சும் சூட்டும் புகழாரமுமே மிகுதியாக இருக்கின்றன. உலகுக்கு அறிமுகமானவர்களே இவ் வாறு ஒதுக்கப்படும் இன்றைய அறிவுயுகத்தில் நம் திரைப்படக் கலைஞர்கள் தங்கள் நிலையை எண்ணிப்பார்த்துத்தங்களின் நடை முறையையும், திரைப்பட அணுகு முறையையும் மாற்றிக்கொள்ள வேண்டும். நடைமுறைக்கும் உண்மைக்கும் பொருந்தாத பயனில் லாத கதை, கற்பனை, காட்சி ஆகியன இணைந்த இன்றைய கலை வடிவங்கள் நாளை நேரடியாகவோ மறைமுகமாகவோ எதிர்க்கப் படலாம். குற்றம் குறைகாணல், கண்டனம் செய்தல், படங்களைத் திரையரங்குகளில் போடவிடாமல் தடுத்தல், படங்களை எரித்தல் ஆகிய எதிர்நிலை எதிர்ப்புகளைவிட, உண்மைக்குக் கலைவடிவம் தரல், உண்மையில் நயம் காணல் ஆகியவற்றை ஊக்குவித்தல் போன்ற நேர்நிலைப் பண்புகளின் மூலமாக இதுவரை வளர்ந்த திரைப்பட வரலாற்றின் பக்கங்களையே செல்லரித்துவிடச் செய்து விட முடியும். நம்மைச் சுற்றியிருக்கும் அயல்மொழித்திரைப்படங் களின் நேரிய கலைநுணுக்கம் இவற்றை நிறைவேற்றுதற்குரிய நம்பிக்கையை நமக்குத் தந்துகொண்டிருக்கிறது.





1982-ஜூலை அமெரிக்கப் பயணத்தில் திராவிட மொழியியல் அறிஞர் பேராசிரியர் டாக்டர் எமனோவுடன் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி; பின்னணியில் இருப்பது பெர்க்கிலி பல்கலைக்கழகம்.



1982-ஜூன் திங்கள் மாண்புமிகு தமிழகக்கல்வி அமைச்சர் தலைமையில் மக்கள் சீன அரசின் விருந்தினராய்ச் சென்ற கல்விக் குழுவில் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி, டாக்டர்கள் மு. நாகநாதன், கே. ஏ. நடராசன், டி. எம். சீனிவாசன், திரு. செ. இராமதாசு, ஐ. ஏ. எஸ்., திரு. வாங்பொசி.



வங்கியியல் கலைச்சொல்லாக்கப் பணிக்கு உரிய வல்லுநர் குழுவில் உறுப்பினராக இருந்து உதவிய டாக்டர் பொற்கோவுக்குத் திருவள்ளுவர் திருநாளில் (16—1—84) வள்ளுவர் கோட்டத்தில் மாண்புமிகு தமிழக முதல்வர் சிறப்பு செய்கிறார். டாக்டர் நாவலர் மகிழ்கிறார்.



டாக்டர் கு. மோகனராசு அவர்கள் தாம் எழுதிய '**திருக்குறளில் மரபுகள்**' (சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வு மைய வெளியீடு) என்னும் நூலுக்குத் தமிழக அரசின் முதற்பரிசினைப் பெறுகிறார். பரிசு வழங்குபவர் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள். இடம்: வள்ளுவர் கோட்டம்.



Seminar on Interlingual Contacts among Oriental Languages—22-9-83 During Post—Centenary Silver Jubilee Celebrations, University of Madras.

Dr. N. D. Sundaravadivelu delivers Key-note address. Hon'ble Pulamai Pithan Presides. Hon'ble Minister R. M. Veerappan inaugurates.



Seminar on Interlingual Contacts among Oriental Languages-Held on 22-9-83 during the post-Centenary Silver Jubilee Celebrations—University of Madras.



தமிழ்-ஜப்பானிய மொழித்தொடர்பு பற்றி டாக்டர் பொற்கோவுடன் ஓராண்டுக் காலம் (1981—82) ஆய்வு நிகழ்த்திய ஜப்பானியப் பேராசிரியர் டாக்டர் ஓனோ அவர்கள் தாயகம் திரும்புகிறார்-துணைவேந்தர் டாக்டர் எம். சாந்தப்பா அவர்கள் அவர் பணியைப் பாராட்டி வாழ்த்தும் விழா 2-7-82.



பல்கலைக்கழக நிதி நல்கைக் குழுவின் உதவியுடன் நிகழ்ந்த திருக்குறள்
ஆராய்ச்சி மதிப்பீட்டுக் கருத்தரங்கு 24, 25, 26—8—83.
சீனத்துத் தமிழறிஞர் திரு வாங்பொசி பேசுகிறார்.



பல்கலைக்கழக நிதிநல்கைக் குழுவின் உதவியுடன் நிகழ்ந்த திருக்குறள்
ஆராய்ச்சி மதிப்பீட்டுக் கருத்தரங்கு 24, 25, 26-8-83.
முத்தமிழ்க்காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் பேசுகிறார்.



மலையாள மொழி வரலாற்றுக் கருத்தரங்கு
தொடக்கவுரை: துணைவேந்தர் டாக்டர் எம். சாந்தப்பா
1981 டிசம்பர் 7 முதல் 11 முடிய




நாட்டுப்புறவியல் கருத்தரங்கு: சிறப்பு விருந்தினர்: டாக்டர் பி. இராமராஜ் (உஸ்மானியாப் பல்கலைக்கழகம்-நடுவில் இருப்பவர்) வரவேற்பு: டாக்டர் ந. சஞ்சீவி; தலைமை: டாக்டர் பொற்கோ; 15.12.81.




பேராசிரியர் டாக்டர் சுகுமார் அழிக்கோடு இக்கால இலக்கியத் திறனாய்வு குறித்துச் சிறப்புரையாற்றுகிறார். 20-2-82.



கிறித்தவத் தமிழிலக்கிய இருக்கைத் தொடக்க விழா 10-11-83.



அவ்வை சண்முகம் நிறுவிய அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்.
நாடகப்பேராசிரியர் பம்மல் சம்பந்த முதலியார், வரிசைப்படி: நன்றியுரை.
டாக்டர் பொற்கோ, தலைமை: கலைமாமணி, டி. வி. நாராயணசாமி,
உரையாளர்: கலைமாமணி, தஞ்சைவாணன் 30-11-82.



**Teaching Staff and**
**Part-time Students of Certificate Course in Linguistics, 1982-83**




நேருக்கு நேர்-இதயத்துடன் இதயம் நிகழ்ச்சியில் ஈழத்தமிழ்க்
கவிஞர் காசி ஆனந்தன் 20-1-1982.



தமிழ் முனிவர் திரு. வி. க. நூற்றாண்டு விழா
திருவேங்கடவன் பல்கலைக்கழகம் 27-8-1982.



கிறித்தவத் தமிழிலக்கிய இருக்கைத் தொடக்க விழா மார்ட்டின்லூதர் நானூறாம் ஆண்டு விழா வரிசை: டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், டாக்டர்கள் தயானந்தன், பிரான்சிஸ், சூ இன்னாசி, ந. சஞ்சீவி; தொடக்கவுரை: பேராயர் டாக்டர் அருளப்பா 10-11-83.



பாரதி நூற்றாண்டு விழாக் கருத்தரங்கு. அமைப்பாளர்: டாக்டர் எஸ். என். கணேசன், வரவேற்புரை, அவைத்தலைமை: டாக்டர் கே. எம். பி. வாரியார் 16-12-81.

# கலைக்கதிரில் தமிழியல் கட்டுரைகள்

—ஒரு வகைதொகை அடைவு

டாக்டர் கு. மோகனராசு,
(பி. எசி., எம்.ஏ., பிஎச்.டி., உயர் சான்றிதழ்கள்:
மானிடவியல், புவியியல், உயர்கல்வியியல்,
சான்றிதழ்—சமசுகிருதம்)

விரிவுரையாளர்,
திருக்குறள் ஆய்வுமையம், தமிழிலக்கியத்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-5.

சென்னைப் பல்கலைக்கழகம்
1983

## முன்னுரை

புற உலகினைப் பற்றிய தெளிவான அறிவினைப் பெற்று, இவ்வுலகில்—இவ்வுலகில் வாழும் பலகோடி உயிரினங்களுள் தன் 'இடம்' என்ன என்பதை ஒருவன் உணர வழி வகுப்பது அறிவியல். உலகில் வாழும் பல்வேறு மக்களின் பண்பாட்டு நெறிகளைத் தெளிந்து, சமுதாய அரங்கில் தன் 'இடம்' என்ன என்பதை ஒருவன் உணர வழி வகுப்பது கலையியல். அறிவியலும் கலையியலுமாகிய இரண்டும் ஒரு மனிதன் 'தன்'னை உணர்தற்கே வழிவகுக்கின்றன. தன்னை உணர்ந்தவனே உண்மையான அறிவுடையவன்—உண்மையான மனிதன். 'தன்'னை உணர வழிவகுக்கும் அறிவியலும் கலையியலும் அவனுடைய இருகண்கள். இதனாலன்றோ வள்ளுவம்,

> **எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
> **கண்ணென்ப வாழும் உயிர்க்கு** (குறள்-392)

எனத் துணிந்துரைக்கின்றது.

தமிழ் நாட்டில்—தமிழில் தோன்றிய இதழ்கள் பலவும் கலையியலுக்கு முதன்மை தந்து, அதனைப் பேணி வளர்த்தன, வளர்த்தும் வருகின்றன. அவைகள் தமிழனின் ஒரு கண்ணிற்குத்தான் ஒளியூட்டின; ஒளி ஊட்டியும் வருகின்றன. ஆனால், தமிழனின் இரு கண்களுக்கும் ஒளியூட்டிட, கடந்த முப்பத்து மூன்று ஆண்டுகளாக அயராது பாடுபட்டு வரும் ஒரே இதழ் கலைக்கதிர்தான் என்பதை உலகறியும். அயராத உழைப்பால் அதற்கு உயிரூட்டிப் பாராட்டிச் சீராட்டி வளர்த்து வருபவர் 'தொழிலுலகச் செம்மல்' எனத் தமிழுலகம் வியக்க வாழ்பவரும் சென்னைப் பல்கலைக்கழக மாண்புமிகு முந்நாள் துணைவேந்தருமாகிய **ஜி. ஆர். தாமோதரன்** அவர்களே ஆவார். தமிழ் உலகிற்குக் கலைக்கதிர் வழி அவர்கள் ஆற்றிவரும் தொண்டு அரியது-பெரியது. வணிக நோக்கில் முகிழ்த்த பல இதழ்களிடை அறிவு புகட்டும் ஒரே நோக்கில், அறிவியற் கருத்துகளை அள்ளி அள்ளித் தந்து, தமிழனைத் துள்ளி மகிழவைத்த ஒரே ஏடு கலைக்கதிர்தான்; உண்மை, வெறும் புகழ்ச்சி அன்று.

கலைக்கதிரின் முதல் ஏடு 1948-ஆம் ஆண்டு சனவரித்திங்கள் அன்று வெளியாகியது. இந்தியாவின் ஆன்மீக ஒளி (காந்தியடிகள்) மறைந்த திங்களில் அறிவியல் ஒளி (கலைக்கதிர்) தோன்றியது எனலாம்.

கலைக்கதிர் அறிவியலுக்கு முதன்மை தரும் நோக்கில் தொடங்கப் பட்டபோதும், தொடக்கத்தில் கலையியல் தொடர்பான கட்டுரைகளே மிகுதியும் இடம் பெற்றன; காலம் செல்லச் செல்ல அறிவியல் தொடர் பான கட்டுரைகள்—செய்திகள் முதன்மை இடம் பெற்றன ; எனினும் கலையியலுக்கு என்றும் உரிய மதிப்பு அதில் உண்டு.

முப்பது மூன்று ஆண்டுகளாகக் கலைக்கதிரில் வெளிவந்துள்ள 579 கட்டுரைகள் இவ்வடைவில் வகை தொகை செய்யப்பட்டுள்ளன. இவ் வடைவு செய்ய என்னை 1974-ஆம் ஆண்டிலேயே ஆற்றுப்படுத்தியவர் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறைத்தலைவர் சிந்தனைச் செம்மல்' பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள்.

இவ்வடைவு ஆராய்ச்சி உலகிற்குப் பெரிதும் பயன்படும் என்னும் நோக்கில் இதனை வெளியிட முனைந்துள்ளேன். இந்த அடைவில் 1981 முடிய கலைக்கதிரில் வெளிவந்துள்ள தமிழியல் கட்டுரைகள், குறிப்புகள் ஆகியன மட்டுமே அடைவு செய்யப்பட்டுள்ளன.

ஆய்வுரை

# கலைக்கதிர் வளர்த்த தமிழாய்வு

## 1. கலைக்கதிர்

காலத்தின் தேவை கருதி, அவ்வப்போது கருக்கொள்ளும் பல்துறை அறிவினை எளிய தமிழில் தெளிவாக-இனிமையாக-கற்போர் உளங்கொள எடுத்துரைத்துத் தமிழ்ப்பணி ஆற்றும் தனிப்பெரும் ஒப்பற்ற ஏடே கலைக் கதிர். இதனைப் பல்துறைக் கருத்துக் கருவூலம் எனவும், அகராதியில் அமையாத அரிய பெரிய பல்துறைக் களஞ்சியம் எனவும் போற்றுதல் சாலப் பொருந்தும்.

> ...நீயே தாயெனும் தன்மையின்
> மேயபே ராசைஎம் மீக்கொள ஓர்வழி
> உழைத்தலே தருதியென் றிழைத்தஇச் சிறுபணி
> வெள்ளிய தெனினும் விளங்குநின் கணைக்காற்கு
> ஒள்ளிய சிறுவிரல் அணியாகக் கொண்மதி
> அன்பே குறியெனக் குறித்தே.

எனத் தமிழன்னையிடம் கலைக்கதிர் ஆசிரியர் முறையிடுவது அவருடைய பேரடக்கத்தின் எதிரொலியே; உண்மையில் தமிழன்னையின் ஆரமெனத் திகழும் பெரும்பேறு பெற்றது கலைக்கதிர் எனின், அது மிகையாகாது. தமிழ் வளர்ச்சிப் பாதையில் ஒரு பெரும் நம்பிக்கை ஒளியாகி வழிகாட்டுவது கலைக்கதிர் என்பது தமிழ் உலகம் ஏற்றுக்கொண்ட மறைக்க முடியாத-மறுக்க முடியாத உண்மை ஆகும்.

## 2. கலைக்கதிரின் தொடக்கம்

தமிழுக்கு வாய்ந்த ஆக்கக் கதிர்களுள் ஒன்றாக விளங்கும் கலைக் கதிர் 1948-ஆம் ஆண்டு மார்கழித் திங்கள் தோன்றியது. 1952-ஆம் ஆண்டு ஆடித்திங்கள் முடிய உள்ள 44 இதழ்களில் அட்டைகளிலும் முகப்புப் பக்கங் களிலும் தமிழ் ஆண்டுகள், திங்கள்களின் பெயர்கள் இடம்பெற்று உள்ளன. 45-வது இதழ், ஆவணி முதல் நாள் வெளிவருவதற்குப் பதிலாகச் செப்டம்பர் முதல் நாள்—அதாவது, 44-வது இதழ் வெளிவந்த 45-வது நாள் வெளிவந்துள்ளது. அவ்விதழில், வாசகர்களுக்கு, ‘இனி, கலைக்கதிர் ஆங்கில மாதம் முதல் தேதியில் வெளிவரும்; இது செப்டம்பர் இதழ்; அடுத்த இதழ் அக்டோபர் முதல் தேதி வெளிவரும்’ என்னும் அறிவிப்பு வெளிவந்துள்ளது. இந்தப் பதினைந்து நாள் கூடுதலினால், ஒவ்வோர் ஆண்டும் மார்கழித்திங்களில் தொடங்கிய இதழ், சனவரித்திங்களில் தொடங்கும் மாற்றம் பெற்றது; ஒவ்வோர் ஆண்டும் இரண்டாவது இதழாக வெளிவந்த பொங்கல் சிறப்பு இதழ், முதல் இதழ் ஆயிற்று.

பொங்கல் சிறப்பு இதழ், கலைக்கதிரின் தொடக்க இதழாக அமைய வேண்டும் என்னும் விழைவு, இத்தகைய மாற்றத்துக்கு அடிப்படைக் காரணமாக அமைந்திருத்தலும் கூடும். இத்தகைய மாற்றத்தினால், 1953-ஆம் ஆண்டு முதல் சனவரித் திங்களே கலைக்கதிரின் தொடக்கத் திங்களாக இருந்து வருகின்றது.

## 3. ஆசிரியர்

அறிவியல் புதுமைகளின் பதிவேடாக-விரைவுப் பதிவேடாக விளங்கும் கலைக்கதிர் தொடங்கியது முதல் சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் மாண்பமை துணைவேந்தராக வீற்றிருந்த தொழில்மேதை-அறிவியல் தமிழ் வளர்க்கும் அறிஞர்-பேராசிரியர் டாக்டர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களே ஆசிரியராக இருந்து வந்து உள்ளார். அவர் துணைவேந்தரானதிலிருந்து கலைக்கதிரின் மதிப்பியல் ஆசிரியராக இருந்து வந்தார். பிறகு பி. எஸ். ஜி. அறநிலைய நிர்வாக அறங்காவலர் திரு. ஜி. வரதராஜ் அவர்கள் ஆசிரியராக இருந்து வந்தார். கலைக்கதிர் உருவாகிச் செம்மையான முறையிலே தமிழ்த்தொண்டு ஆற்றுவதற்கு வினை ஊக்கிகளாக இருந்து உதவிய பேராசிரியப் பெருமக்கள் பலர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் திரு. போ. ரா. கிருஷ்ணமூர்த்தி, டாக்டர் தெ. பொ. மீ., டாக்டர் மு.வ., திரு. அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி, டாக்டர் ம. ரா. போ. குருசாமி ஆகியோர் ஆவர்.

## 4. நோக்கம்

வளரும் குழந்தைகளுக்குப் பசும்பாலினும் தாய்ப்பாலே எல்லா வகையினும் சிறந்தது எனக் கருதும் உண்மையான தாய்மை உணர்வும், 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' எனக் கருதும் உண்மையான தந்தைமை உணர்வும் 'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்' என்னும் வள்ளுவ உள்ளமும் ஒரு சேரக் கொண்ட ஒரு பெரும் தமிழ் நெஞ்சத்தின் உயிர்த் துடிப்பே-துடிப்பு இழையோடிய பதிவுகளே கலைக்கதிர் என்பதை அதன் நோக்கையும் போக்கையும் தோற்றத்தையும் ஏற்றத்தையும் அறியவல்லார் மிகத் தெளிவாக உணர்வர். 'தமிழ் வாழ்க! தமிழ் வளர்க!!' என்னும் வெற்றொலி ஆரவாரங்களினும், அமைதியான ஆக்கத் திறமான பணிகளால்தான் தமிழை வாழ்விக்க—வளர்விக்க முடியும் என்னும் ஆணித்தரமான நம்பிக்கையும், அதற்குச் செயல் வடிவு தரும் உள்ள உறுதியும் கொண்டவர் கலைக்கதிர் ஆசிரியர்.

'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்-கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந் திங்குச் சேர்ப்பீர்' என்னும் பாரதியாரின் கட்டளையைத் தலைமேற் கொண்டு, 'தமிழினத்துக்கு வேண்டிய பொருள் எங்கே இருந்தாலும் அதனைக் கொண்டு வந்து சேர்க்கும் அரும் பணியைக் 'கலைக்கதிர்' ஆற்றும் என்பது உறுதி, (கலைக்கதிர், மலர்-க, இதழ்-க,) என்னும் உறுதியுடனே கலைக்கதிரை ஆசிரியர் தொடங்குகின்றார்.

பல்கலை அறிவை—சிறப்பாக, நாள்தோறும் வளர்ந்து வரும் அறிவியல் அறிவை எளிய இனிய தமிழில் பெற்றுத் தெளிந்து, தமிழ் இனம் விழிப்புற வேண்டும்; தமிழ் ஆக்கம் பெற வேண்டும் என்னும் விழுமிய நோக்கோடே கலைக்கதிர் தோன்றியது; இன்றளவும் அதன் அடிப்படை நோக்கில் எவ்வித மாறுபாடும் இல்லை; எனினும் நோக்கத்தை வெளிப்படுத்தும் நிலையில் காலத்துக்குக் காலம் ஒரு சில நுட்ப வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆசிரியரின் பின்வரும் கூற்றுகளே இதற்குச் சான்றுகளாகும் :

> "தற்காலத்துக்கு வேண்டிய விஞ்ஞானம், பொறியியல், பொருளாதாரம், இலக்கியம், வரலாறு ஆகிய இவை பற்றிய அறிவினைத் தமிழ்நாட்டில் வளரச் செய்வதாகிய சிறந்த தொண்டினை மேற்கொண்டு 'கலைக்கதிர்' உதயமாகிறது" (1:1)

> "அறிவியல் புதுமைகளைத் தமிழ் மக்களுக்கு எளிய தமிழில் விளக்குவதே கலைக்கதிரின் சிறப்பான நோக்கமாகும்" (18:1)

> "அறிவியல் தொழில் நுட்பக்கலை பற்றிய கருத்துகளைப் பரப்புவதற்கென்றே உருவெடுத்த மாத இதழ் கலைக்கதிர்" (30:3)

நோக்கங்களில் காணும் நுட்ப வேறுபாடுகளுக்குத் தக்கவாறு கலைக்கதிரில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளின் போக்கும் மாற்றம் பெற்றுள்ளது என்பது கருதத்தக்கது.

## 5. ஆய்வின் எல்லை

**'கலைக்கதிர் வளர்த்த தமிழாய்வு'** என்னும் தலைப்பில் தமிழில் வந்துள்ள பல்துறை ஆய்வுக் கட்டுரைகளை ஆய்வது என்பது முழுமையான ஆய்வு ; தமிழ் இலக்கியம்-மொழி தொடர்பாக வந்துள்ள ஆய்வுகளை ஆய்வது என்பது அதில் ஒருகூறு. முழு அளவினதான ஆய்வு பல்வேறு கிளைகளாகப் பிரிந்து தனித்தனி டாக்டர் பட்ட ஆய்வுகளாக வெளி வருதற்குரிய விரிந்து பரந்த எல்லை பரப்புகளை உடையது. இக் கட்டுரையில் தமிழ் இலக்கியம், மொழி தொடர்பாக வந்துள்ள ஆய்வுகள் மட்டுமே கருக்களாகக் கொள்ளப்பட்டன. (இவற்றுள் முப்பது ஆண்டுகளில் வெளிவந்துள்ள தமிழாய்வுக் கட்டுரைகள் மட்டுமே ஆய்வுக்குக் கொள்ளப் பட்டுள்ளன. பொங்கல் சிறப்பு மலர்களுள் தனியாக வந்தவை ஆய்வில் சேரவில்லை.)

## 6. தமிழ் உணர்வு

கலைக்கதிர் ஆசிரியரின் நோக்கம் என்னும் குருதியிலே சிவப்பு அணுக்களாக விளங்குவன தமிழ் உணர்வே; இதனை, ஆய்வுலகம்-தமிழ் உலகம் நன்கு உணர முடியும். ஆசிரியரின் தமிழ் உணர்வுக்குப் பல்வேறு சான்றுகளைத் தர முடியும் என்றாலும், சுருக்கம் கருதி ஒரு சில சான்றுகளே இங்குத் தரப்படுகின்றன. கலைக்கதிரின் முதல் இதழே தமிழ் மணம் கமழத் தொடங்குகின்றது. தொடக்க இதழ் அட்டையில் 'கலைக் கதிர் மாத வெளியீடு-சர்வதாரி மலர்:க மார்கழி இதழ்:க' எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. தமிழ் வழக்கில் உள்ள ஆண்டின் பெயரும் தமிழ்த் திங்களின்

பெயரும் தமிழ் எண்களும் இடம் பெற்றுள்ளமை கருதத்தக்கதாகும். முகப்புப் பக்கத்திலும்கூட ஆங்கிலத் திங்களின் பெயர் இடம் பெற வில்லை (இந்நிலை முதல் 44 இதழ்களில் நீடித்துள்ளது). கலைக்கதிர் இதழைத் தம் தந்தைக்குக் காணிக்கை ஆக்கும் ஆசிரியர், முதல் இதழினை,

கல்வியறி வெங்கும் கமழநினைத் தெமக்கு
நல்லவழி காட்டி நலம்பலவும்—பல்லோர்க்கும்
ஆக்கினார் எந்தை அவர்தமக்காம் காணிக்கை
ஆக்கினோம் இந்நூல் தனை

என்னும் படையல் பாவுடன் தொடங்குகின்றார்.

முதல் இதழின் முகப்புப் பக்கம் மகாகவி பாரதியாரின் கட்டளையுடன் தொடங்குகிறது; அடுத்து, நாமக்கல் கவிஞர் அவர்களின் வாழ்த்துப்பா; அதனை அடுத்து டாக்டர் மு. வ. அவர்களின் நல்ல நூல் என்னும் கட்டுரை. கலைக்கதிரின் அட்டைப் படங்களிலும் உள்ளேயும் தமிழறிஞர், புலவர், அரசியல் தலைவர் முதலிய பெருமக்களின் வண்ண ஓவியங்களும் புகைப் படங்களும் பல வெளிவந்துள்ளன. தமிழ் இலக்கியக் காட்சிகள் பல, அட்டையிலும் உள்ளேயும் வண்ண ஓவியங்களாக இடம் பெற்று உள்ளன. நற்றிணையில் வரும் 33 பாடல்களுக்கு 33 முழுப் பக்க வண்ண ஓவியங்கள் கலைக்கதிரில் தொடர்ந்து வெளிவந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்க தாகும் சிறப்பு மலர்களில், சித்திரச் சிலம்பு, சூளாமணிக் காட்சிகள், சிந்தாமணிக் காட்சிகள் என அவ்வக் காப்பியங்களில் இடம்பெறும் இன்றி யமையாக் காட்சிகள் தொகுப்பு, வண்ண ஓவியங்களாக இடம் பெற்று உள்ளன. இத்தகைய அரும் பெரும்பணியை-பொருள் இழப்பையும் கருதாத செந்தமிழ்ப் பணியைத் தமிழ் இலக்கண இலக்கிய ஆய்வுக்கென்றே தோன்றிய இதழ்களும் இதுவரை செய்ததில்லை என்பது வெள்ளிடைமலை.

ஆண்டுதோறும் பொங்கல் சிறப்பு மலர்கள் வெளிவந்துள்ளன; இவற் றொடு, வள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுச் சிறப்பு மலரும், தமிழ்மொழியே பயிற்றுமொழியாக அமைய வேண்டும் என்னும் நோக்கில் பயிற்று மொழிச் சிறப்பு மலரும் வெளிவந்துள்ளன.

அடிசிற்கினியாள், கானல்வரி, சமணத் தமிழ் இலக்கிய வரலாறு, குலசேகரர், தெ. பொ. மீ. மணி விழா மலர், A Critical Study of Civakasinthamani என்னும் நூல்கள் கலைக்கதிர் வெளியீடுகளாக வெளி வந்துள்ளன. தமிழில் அறிவியல் கலைச் சொற்களை உருவாக்க வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கில், வேதியியல் கலைச்சொற்கள் தொகுதியும், இயற்பியல் கலைச்சொற்கள் தொகுதியும் கலைக்கதிர் வாயிலாக வெளி வந்துள்ளன. அறிவியல் தமிழாக்க மாநாடுகள் இரண்டினைக் கலைக் கதிர் நடத்தி, இரு சிறப்பு இதழ்களையும் வெளியிட்டு உள்ளது.

தமிழ் அறிஞர்களுக்கும் புலவர்களுக்கும் நடைபெறும் மணிவிழா முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளையும், இறப்பு முதலிய இரங்கல் நிகழ்ச்சி களையும் அவர்களின் சிறப்புப் பணிகளோடு தக்கவாறு வெளியிட்டுக் கலைக்கதிர் தொண்டாற்றி வருகிறது. புதுமைப்பித்தன் அவர்கள் இறந்தபோது, வறுமையில் வாடிய அவருடைய குடும்பத்தாருக்கு நிதி திரட்டும் பணியில் கலைக்கதிர் ஈடுபட்டது குறிப்பிடத்தக்கதொரு செய்தி.

கலைக்கதிரில் வெளிவந்துள்ள பல்துறைக் கட்டுரைகளிலும் பெரும்பாலான வற்றில் தமிழ் இலக்கியக் கருத்துக்கள்-பாடல்கள் ஊடே இடம் பெற்று உள்ளன.

இவ்வாறு பல்வகையிலும் இழையோடி நின்ற தமிழ்உணர்வு கலைக் கதிரில் தமிழ் இலக்கியம் மொழி தொடர்பான ஆய்வுகள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றதற்கு அடிப்படைக்காரணம் எனலாம்.

## 7. படைப்பிலக்கியங்களும் தமிழியல் கட்டுரைகளும்

கலைக்கதிரில் 30 ஆண்டுகளில் வெளிவந்துள்ள படைப்பிலக்கியங்கள் தமிழியல் கட்டுரைகள் ஆகியவற்றின் ஒருங்கிணைந்த மொத்த எண்ணிக்கை வருமாறு :

1948 — 1958 = 660
1959 — 1968 = 354
1969 — 1978 = 248

இவற்றுள், ஒவ்வொரு படைப்பிலக்கிய வகையும் தமிழியல் கட்டுரை களும் பெற்றுள்ள விழுக்காட்டு விவர வரைபடம் வருமாறு :

கலைக்கதிரில் படைப்பிலக்கியங்களும் தமிழியல் கட்டுரைகளும்




(படம் : 1)

இங்குக் குறிப்பிடத்தக்க ஒன்று, படைப்பிலக்கியங்களினும் தமிழ் இயல் கட்டுரைகளின் எண்ணிக்கை ஒவ்வொரு பத்தாண்டிலும் கூடி உள்ளது என்பதே,

## 8. தமிழியல் கட்டுரைகள்

8.1 தமிழியல் கட்டுரைகளுள் தமிழ் ஆய்வுக் கட்டுரைகளும் பிறவும் பெற்றுள்ள இடம் வருமாறு:

தமிழியல் கட்டுரைகள்– தமிழ் ஆய்வுக்கட்டுரைகள்




※ தமிழ் அறிஞர் - புலவர் பற்றிய குறிப்புகள்

(படம் : 2)

தமிழியல் கட்டுரைகளுள் தமிழ் ஆய்வுக் கட்டுரைகளுக்கே முதன்மை இடம் தந்துள்ளமை மேற்காட்டிய விளக்கப்படத்தால் புலனாகும். மொத்தத்தில், 30 ஆண்டுகளில் வெளிவந்த 359 இதழ்களில் (1973 ஜுன் இதழ் வரவில்லை) 45 இலக்கியத் திறன் ஆய்வுக் கட்டுரைகளும், 67 வரலாறு பண்பாடு பற்றிய கட்டுரைகளும், 86 மொழியியல்-சொல்லாக்கக் கட்டுரை களும், 20 இலக்கிய வரலாற்றுக் கட்டுரைகளும், 165 தனி இலக்கிய ஆய்வு களும் வெளிவந்துள்ளன. அன்றியும் சிலப்பதிகாரச் செய்யுள், கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, தொல் காப்பிய நெறி ஆகிய தொடர் ஆய்வுக் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

## 9. கூடுதலும் குறைவும்

கலைக்கதிரில் ஒவ்வோர் ஆண்டும் வெளிவந்துள்ள தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கைகளை நோக்கின், ஒரே ஆண்டில் 45 கட்டுரைகள் (முதல் ஆண்டு) வந்துள்ளதையும் காணுகின்றோம்; ஒரு கட்டுரையும் வாராததையும் (19, 22-வது ஆண்டுகள்) காணுகின்றோம்; தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை ஒரே சீராக இல்லாமையையும் தெளிவாகக் காணுகின்றோம். தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை அடிப்படையில் கலைக்கதிரின் முதல் பதினான்கு ஆண்டுகளை ஒரு காலக்கட்டமாகவும் அடுத்த பதினாறு ஆண்டுகளை மற்றொரு காலக்கட்டமாகவும், பிரிக்கலாமோ என எண்ணத் தோன்றுகிறது; எனினும், சில விதிவிலக்குகளும் (21, 26, 28-ஆம் ஆண்டுகள்) உண்டு. இனி, தமிழாய்வுக் கட்டுரைகளின் கூடுதல் குறைதல்களுக்கான காரணங்களைக் காண்போம்:



கலைக்கதிரில் தமிழாய்வுக் கட்டுரைகள்
X - அச்சில் 1 செ.மீ. = 2 ஆண்டுகள்
Y - அச்சில் 1 செ.மீ. = 2 கட்டுரைகள்
மலர் (ஆண்டு) எண்

வளர்ந்து வரும் அறிவியல், பொருளியல், உளவியல் முதலாய பல் துறை அறிவைத் தமிழில் தாமுடியுமா எனத் தமிழகம் பெரிதும் குழம்பிக் கொண்டிருந்த காலக்கட்டத்தில்-அறிவியல் அறிவோடு ஆங்கிலம் தமிழ் ஆகிய இருமொழிகளிலும் புலமை பெற்று இருந்தவர்களும் தமிழில் அறிவியல் கருத்துகளை மொழிபெயர்த்துத் தர அஞ்சிய காலக்கட்டத்தில் ஒரு நம்பிக்கை ஒளியாகத் தோன்றியது கலைக்கதிர். கலைக்கதிர் தோன்றி வளர்வதற்கு வித்திட்டவர்களுள் பெரும்பான்மையோர் தமிழ்ப் பேராறிஞர்கள். கலை ஆர்வம் வேரூன்றி நிற்கும் தமிழ்மண்ணில், அறிவியல் சிந்தனைகளை முழுவதுமாகக் கொண்ட ஓர் இதழுக்கு வரவேற்பு இருக்குமா என்ற அச்சம் எழுவது இயற்கையாதலால், படிப்படியாகவே அறிவியல் சிந்தனைகளை ஊட்டவேண்டும் என்னும் சூழல்! ஓரளவு இத் தகைய காரணங்களால் முதலிரண்டு ஆண்டுக் கலைக்கதிர்களில் தமிழ் ஆய்வுத் தொடர்பான கட்டுரைகள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன எனலாம்.

மேலும், மேலை நாடுகளில் இலக்கியத் திறன், இலக்கிய மாபு ஆகிய வற்றில் தோன்றிய விழிப்புணர்வு தமிழ்மண்ணில் தாக்கத்தை ஏற்படுத்திய போது, கலைக்கதிர் அதற்கு உண்மையான வரவேற்பை நல்கி உள்ளது. டாக்டர் மு. வ., அ. ச. ஞானசம்பந்தம் ஆகியோர் தொடர்ந்து இத் துறைகளில் கட்டுரைகள் எழுதி வந்துள்ளனர். முதலிரண்டு ஆண்டுகளில் வெளிவந்த தமிழாய்வுக் கட்டுரைகள் 83-இல் 33 கட்டுரைகள் (ஏறத்தாழ 40%) இலக்கியத் திறன்-இலக்கிய மாபு பற்றியவை என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். சிலப்பதிகாரச் செய்யுள், கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும் என்னும் தொடர் ஆய்வுக் கட்டுரைகள் முதலிரண்டு ஆண்டுகளில் தொடர்ந்து வெளிவந்துள்ளதும் (வரைபடத்தில் தொடர் கட்டுரையின் ஒவ்வொரு தொடரும் ஒரு தனி ஆய்வுக் கட்டுரை என்னும் அளவில் கொள்ளப்பட்டுள்ளது) கட்டுரைகளின் எண்ணிக்கை கூடுவதற்கு ஒரு வகையில் காரணமாயின எனலாம். முதலிரண்டு ஆண்டுகளில் எண்ணிக்கை அளவில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றிருந்த தமிழாய்வுக் கட்டுரைகள் 3, 4, 5, 6-ஆம் ஆண்டுகளில் எண்ணிக்கை அளவில் குறைந்து உள்ளன. இதற்கான காரணங்கள் பின்வருவனவாகலாம்.

1. இலக்கிய மாபு-இலக்கியத்திறன் தொடர்பான கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வந்த டாக்டர் மு. வ., அ. ச. ஞானசம்பந்தம் ஆகியோர், அவற்றை நிறுத்தி விட்டு, அவ்வப்போது சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுகளை வெளியிடுவதில் ஈடுபட்டமை.

2. டாக்டர் மு. வ. அவர்கள் சமுதாயச் சிந்தனைகளை அடிப் படைகளாகக் கொண்ட சிறுகதைகளை எழுதுவதிலும், சங்க இலக்கியப் பாடல்களுக்கு விளக்கங்கள் தருவதிலும் தம் பார்வையைச் செலுத்தியமை.

3. சமய, சமுதாய, மொழியியல் தொடர்பான பொதுக்கட்டுரைகள் முன்னிரண்டு இதழ்களினும் இவற்றில் கூடுதலான இடத்தைப் பெற்றமை.

4. பொங்கல் சிறப்பு மலர்களில் கவிதைகளும் சிறுகதைகளும் சிறப்பிடம் பெற்றமை. (4-ஆம் ஆண்டுப் பொங்கல் மலரில் மட்டும் 7 கவிதைகளும் 5 சிறுகதைகளும் இடம் பெற்றுள்ளன).

மொழியியல் தொடர்பான கட்டுரைகள், (ஒன்பதாவது ஆண்டின் 8-வது இதழ் சுதந்திரப் போராட்டச் சிறப்பு இதழாக அமைந்து, அதில் வெளிவந்த) வரலாற்று ஆய்வுக் கட்டுரைகள், பொங்கல் சிறப்பு இதழ்களில் தமிழ் ஆய்வுக் கட்டுரைகள் பெற்ற சிறப்பிடம், டாக்டர் மு. வ. அவர்களின் 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' என்னும் தொடர் ஆய்வுக் கட்டுரை ஆகியவற்றால் 7, 8, 9-ஆம் ஆண்டுகளில் தமிழ் ஆய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை ஓரளவுக் கூடுதலாயிற்று.

அறிவியல், கலையியல் ஆகியவற்றில்-சிறப்பாக அறிவியலில்-உள்ள பல்வேறு துறைகளுக்கும் உரிய இடம் தர முனைந்து, ஒவ்வொரு துறைக்கும் ஒன்று (அல்லது சில வேளைகளில் இரண்டு) எனப் பிரித்து, கட்டுரைகளைக் கலைக்கதிர் வெளியிடத் தொடங்கியது. இது 15-ஆம் ஆண்டு முதல் தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை குறைவதற்கு அடிப் படைக் காரணம் ஆயிற்று எனலாம்.

மேலும், அறிவியல் அறிஞர்கள், உள்ளத்தின் உண்மை, சிறுவர் அரங்கு, தொழில் நுணுக்கங்கள், பணத்தின் கதை, பொது அறிவுப்புதிர், வரலாறும் வளர்ச்சியும், வானவெளி ஆய்வு, விஞ்ஞானப் புதுமைகள் முதலிய பல்துறைத் தொடர்களும், சீவகசிந்தாமணி, காமக்கண்ணி, அமரா பரணம், பரிசுச் சிறுகதைகள், பரிசுக்கட்டுரைகள் ஆகியவைகளும் தொடர்ந்து இடம் பெற்றுள்ளதும் தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை குறை விற்குப் பேரளவுக் காரணமாகியுள்ளன. பொதுவாக, அறிவியல் சிந்தனை களைத் தமிழ் மக்களுக்கு எளிய இனிய தமிழில் தரவேண்டும் என்னும் நோக்கின் பெரும் பகுதியை இக்காலக் கட்டத்தில் கலைக்கதிர் அடை கின்றது. இவற்றுள், குறிப்பாக 19-ஆம் ஆண்டு, 22-ஆம் ஆண்டு ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் தமிழாய்வுக் கட்டுரைகள் இடம் பெறாமைக்குப் பின்வரும் காரணங்கள் கூறலாம்:

1. அறிவியல் மேதைகள் வாழ்க்கை வரலாறு, அறிவியல் விந்தைகள் (விஞ்ஞானப் புதுமைகள்), அறிவியல் வினா விடை, இன்றைய அறிவியல், சிறுவர் அறிவியல் அரங்கு (சிறுவர் அரங்கு), தொழில் நுணுக்கங்கள், விஞ்ஞான ஆராய்ச்சி முதலிய பல்வேறு தொடர்கள் வெளிவந்தமை.

2. சுதந்திர பாரதம் என்னும் இந்திய வரலாற்றுத் தொடர் தொடர்ந்து வெளிவந்தமை.

3. கற்பென்னும் தீபம், நற்றிணை இன்பம், முதிரமலைச் செல்வி முதலிய தொடர்கள் வெளிவந்தமை.

4. அறிவியல் வளர்ச்சி மலர் (19:8), பொறியியல் மாணவர் மலர் (22:4), பொருளாதாரச் சிறப்பு மலர் (22:11) ஆகியவை வெளிவந்தமை.

வள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுச் சிறப்பு மலரைக் கலைக்கதிர் 1969-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் வெளியிட்டுள்ளது. இம்மலரில் மட்டும் 16 தமிழாய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இதுவே 21-ஆம் ஆண்டில் தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கைக் கூடுதலுக்கு அடிப் படைக் காரணம் ஆயிற்று.

முதல் அறிவியல் தமிழாக்கக் கருத்தரங்கை 1973 டிசம்பர்த் திங்களிலும், அறிவியல் தமிழாக்க இரண்டாம் கருத்தரங்கை இரண்டாண்டுகள் கழித்தும் கலைக்கதிர் நடத்தி உள்ளது. அவற்றைத் தொடர்ந்து கருத் தரங்கச் சிறப்பு மலர்கள் முறையே பிப்பிரவரி 74-லும், பிப்பிரவரி 76-லும் வெளிவந்துள்ளன. கருத்தரங்குகளில் படிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும் பிறவும் தொடர்ந்து வெளிவந்துள்ளன. இக்காரணங்களால், 26, 28 ஆம் ஆண்டு இதழ்களில் தமிழாய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை கூடுதல் பெற்று உள்ளது.

தற்போது வரும் கலைக்கதிர்களில், தமிழ் இலக்கியம்-மொழி தொடர் பான கட்டுரைகளுள் அறிவியல் தொடர்பான கட்டுரைகளே முதன்மை இடம் பெறுகின்றன; எண்ணிக்கை அளவில் குறையினும் கட்டுரைகள் எண்ணத்தின் அளவில் கூடியே செல்கின்றன.

விரைந்து வளர்ந்து வரும் அறிவியல் சிந்தனைகளை அப்போதைக்கப் போது தமிழ்மக்கள் தம் தாய் மொழியிலேயே அறிந்து கொள்ளுமாறு செய்தல் வேண்டும் என்னும் அடிப்படையில் மூகிழ்த்த கலைக்கதிர், தமிழ் மொழி-இலக்கியம் தொடர்பான ஆய்வுகளுக்கும் தக்க இடம் தந்து சிறப்பித் துள்ளது. கலைக்கதிர் தன் அடிப்படை நோக்கை நோக்கிப் படிப்படியாக நடையிட, நடையிட அதில் தமிழ் மொழி-இலக்கியம் தொடர்பான ஆய்வு களின் எண்ணிக்கை பெரும்பான்மையும் குறைந்து கொண்டே வந்துள்ளது; விதிவிலக்குகளும் உண்டு; விதிவிலக்குகளுக்கு அடிப்படைக்காரணங்கள் தமிழ் வளர்ச்சி கருதி—தமிழின் பெருமையை வெளிப்படுத்தும் நோக்கில் வெளி வந்துள்ள சிறப்பு மலர்களே.

இலக்கியக் கொள்கை, இலக்கியத் திறனாய்வு போன்றவற்றில் தமிழ் அறிஞர்கள் தம் பார்வையைச் செலுத்திய தொடக்க காலத்தில் அவற்றிற்குப் பெரும் வரவேற்பு நல்கியது கலைக்கதிர்; பின்னர், மொழியியல் சிந்தனைகள் வளர்ச்சி பெறத் தொடங்கியதும் அம்மொழியியல் தொடர்பான ஆய்வு களுக்கு முதன்மையிடம் தந்துள்ளது; தமிழ் ஆக்கத்திற்குக் கலைச்சொற் படைப்பின் இன்றியமையாமை உணரப்பட்டபோது அதற்குப் போாதரவு தந்துள்ளது; இவ்வகையில் காலமறிந்து தமிழ்ப்பணி ஆற்றும் கலைக் கதிருக்கு ஈடாக வேறோர் இதழைக் கூற முடியுமா என்பது ஐயமே.

'கலைக்கதிரின் நோக்கம், பயன்மிக்க கருத்துக்களைக் காலத்திற்கு ஏற்ப வெளியிட்டுத் தமிழ்ப்பணி புரிவதுதான்' (2:2) என்னும் ஆசிரியர் கூற்றின் உண்மை இவற்றாலும் புலனாகும்.

(நன்றி: கலைக்கதிர்)

# I. இலக்கியங்கள்

## 1. 1 தொல்காப்பியம்

| வரிசை எண் | கட்டுரைத் தலைப்பு | ஆசிரியர் பெயர் | மலர் எண் | இதழ் எண் | பக்கம் / பக்கங்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | களவியற் காட்சிகள் | 'அலர்' | 5 | 1 | 62-67 |
| 2 | ஙனமா? அனமா? | முத்துச்சண்முகம் | 13 | 11 | 37-40 |
| 3 | தத்துவ விளக்கம் | புருஷோத்தம நாயுடு, பி. ஆர். | 9 | 3 | 18-22 |
| 4 | தொல்காப்பிய நெறி | துரையரங்கனார், டாக்டர் | 12 | 1 | 30-34 |
| | ,, | ,, | ,, | 3 | 44-51 |
| | ,, | ,, | ,, | 4 | 17-20 |
| | ,, | ,, | ,, | 5 | 12-17 |
| | ,, | ,, | ,, | 6 | 43-47 |
| | ,, | ,, | ,, | 7 | 22-25 |
| | ,, | ,, | ,, | 8 | 51-54 |
| | ,, | ,, | ,, | 9 | 25-29 |
| | ,, | ,, | ,, | 10 | 45-50 |
| | ,, | ,, | ,, | 11 | 47-52 |
| | ,, | ,, | ,, | 12 | 27-32 |
| | ,, | ,, | 13 | 2 | 45-51 |
| | ,, | ,, | ,, | 3 | 63-67 |
| | ,, | ,, | ,, | 4 | 25-28 |
| | ,, | ,, | ,, | 5 | 53-58 |
| | ,, | ,, | ,, | 6 | 10-14 |
| | ,, | ,, | ,, | 7 | 17-22 |

| வரிசை எண் | கட்டுரைத் தலைப்பு | ஆசிரியர் பெயர் | மலர் எண் | இதழ் எண் | பக்கம் / பக்கங்கள் |
|---|---|---|---|---|---|
| (4) | தொல்காப்பிய நெறி | துரையரங்கனார், டாக்டர் | 13 | 8 | 9-13 |
| | ,, | ,, | ,, | 9 | 47-53 |
| | ,, | ,, | ,, | 10 | 26-30 |
| | ,, | ,, | ,, | 11 | 21-27 |
| | ,, | ,, | ,, | 12 | 42-46 |
| | ,, | ,, | 14 | 1 | 22-28 |
| | ,, | ,, | ,, | 2 | 55-59 |
| | ,, | ,, | ,, | 3 | 42-46 |
| | ,, | ,, | ,, | 4 | 54-58 |
| | ,, | ,, | ,, | 5 | 17-22 |
| | ,, | ,, | ,, | 6 | 21-27 |
| | ,, | ,, | ,, | 7 | 41-47 |
| | ,, | ,, | ,, | 8 | 47-52 |
| | ,, | ,, | ,, | 9 | 17-23 |
| | ,, | ,, | 14 | 10 | 39-43 |
| | ,, | ,, | ,, | 11 | 26-32 |
| 5 | தொல்காப்பியம் கூறும் அடியோர்-வினைவலர் | கோதில் மொழியன், சின். | 34 | 1 | 55-63 |
| 6 | தொன்றும் தொண்டும் ஒன்று ஆகும் | மகாதேவன், கொண்டல் சு. | 27 | 8 | 61-66 |
| 7 | பயிற்று முறை | துரையரங்கனார், டாக்டர் | 9 | 1 | 30-40 |
| 8 | மாணமும் கள்ளும் | துரையரங்கசாமி, மொ. அ. | 7 | 2 | 37-42 |
| 9 | வற்றென் சாரியை | முத்துச்சண்முகம் | 12 | 12 | 62-64 |

